உ
சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில் :

ஸ்ரீ காசிவிநாயகர்
அருட்கோலம்

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 3 தை பகுதி 4

## ஆத்திக வளர்ச்சிப் பணிகள்

நம் திருக்கோயில்களின் நன்மைக்காகவும் பூசகர்கள், ஓதுவார்கள், பிறபணியாளர்கள் நலனுக்காகவும், உயர்ச்சிக்காகவும், அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் தொடங்கியுள்ள நிதித்திட்டத்திற்கு, பல அன்பர்கள் நல்லாதரவு தெரிவித்துக் கடிதங்கள் எழுதியுள்ளார்கள். பல அன்பர்கள் நிதியனுப்பியுள்ளார்கள். அவர்களின் பெயர்கள் இவ்விதழில் பிரசுரிக்கப் பெற்றுள்ளன. அவர்கட்கு மகிழ்ச்சி நிறைந்த நன்றிகள். நிதியுதவும் நல்லன்பர்களின் பட்டியல் நீளவேண்டும். அதற்கு இத்திட்டத்தின் தேவையை வலியுறுத்தி அன்பர்கள் பிரசாரம் செய்ய வேண்டும். நம் சமயம் சார்ந்த சங்கங்கள், மன்றங்களின் உறுப்பினர்கள் இதற்கு உதவவேண்டுகிறேன். அறிக்கைப் பிரதிகள் அச்சிட்டவை உள்ளன. எழுதுங்கள்.

இத்திட்டத்தை ஆதரித்துச் செய்திகள் வெளியிட்ட தினமணி, தினமலர், எழுத்தாளன், திருக்கோயில் வரலாறு உள்ளிட்ட இதழ்களுக்கு நன்றிகள்.

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள், அறிக்கையில் குறிப்பிட்டருளிய கோழம்பம் திருக்கோயில் பூஜைக்காக ஓர் அறக்கட்டளை (12 ஆயிரம்) நிறுவியருளியுள்ளார்கள். திருவாரூர் திருக்கோயிலுக்கும் (ரூ. 12 ஆயிரம்) இம்மாதம் ஓர் அறக்கட்டளை செய்தருளியுள்ளார்கள். திருப்புனவாயில் திருக்கோயிலில் கார்த்திகை இரண்டாவதுசோமவாரம் சங்காபிஷேகம் செய்ய ரூ. 2500 அறக்கட்டளை செய்தருளியுள்ளார்கள். விவரக் குறிப்பு இவ் இதழில்.

பண்டார மும்மணிக்கோவை 11 ஆம் பாடலின் ஒரு பகுதிக்கு அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் விளக்கம் அருளியுள்ளார்கள். எண்பத்து நான்கு இலட்சம் யோனிபேதங்களாகிய வயல்களில் ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் ஒரு களம் செய்யும் உழவன் ஆக ஞானம் விளைவிக்கிறார். உயிர்ப் பயிருக்கு நீர் எது? அப்புனல் வரும் வழிகள் யாவை? என்பன பற்றி இந்த இதழில் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் விளக்கியருளுகிறார்கள்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கல்லூரி முதல்வர் திரு. முத்தரசு அவர்கள் பக்திமணமும் இலக்கிய நயமும் செறிந்த திருப்போரூர் தனிமுதல் என்ற கட்டுரையை இந்த இதழுக்கு அளித்துள்ளார்கள்.

அறிஞர் திரு. மு. அருணுசலம் அவர்களின் சித்தாந்த சாத்திரங்கள் என்னும் தொடர்க் கட்டுரையின் ஒரு பகுதியும் இதழில் பிரசுரமாகியுள்ளது.

மதுரை திரு. தா. குருசாமி, 'திருமுறை ஓவியம்' என்ற தலைப்பில் திருஞானசம்பந்தரின் 'கற்றுங் கெரியோம்பி' என்ற பாடலுக்குச் சுவை செறிந்த விளக்கம் தருகிருர்.

வாகீச கலாநிதி திரு. கி. வா. ஜ. அவர்கள் திருவாரூர் நான் மணிமாலே, பதினுன்காம் பாட்டுக்கு எளிய இனிய அரிய விமர்சன உரை அளித்துள்ளார்கள்.

மற்றும் திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள் எழுதி வந்த இருபா இருபஃது விளக்கவுரை இந்த இதழுடன் நிறைவு பெறுகிறது. தனி நூலாகவும் அவ்விளக்கவுரை தயார் செய்யப்படுகிறது.

சிவ சிவ

# திருவிடைமருதூரில் திருமுறை விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நடத்தப்பெறுவது.

ரௌத்ரி ஆண்டு தைத்திங்கள் 7-ஆம் நாள்

(21—1—81) செவ்வாய்க்கிழமை தைப்பூசம்

தேவார இன்னிசை வாணர்கள் :

தமிழ்மறை கலேமாமணி சங்கீத பூஷணம்
திரு. பி. சாமிநாத முதலியார், சென்னே.

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்
திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்,
திருவாவடுதுறை.

தேவார இசைமணி
திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்,
ஸ்ரீ காசிமடம் கட்டளே ஓதுவார், திருச்சி.

தேவார இசைநம்பி
திரு. S. கல்யாணசுந்தர தேசிகர்,
ஸ்ரீ காசிமடம் கட்டளே, கும்பகோணம்.

திரு. T. R. கிருஷ்ணன், பிடில், கும்பகோணம்.

திரு. கோ. வேங்கடராமன், மிருதங்கம், திருப்பனந்தாள்.

இடைமருதுறையும் எந்தாய் போற்றி!     பரவுக திருமுறை உலகெலாம்!

By order of His Holiness,

ஸ்ரீகாசிமடம்,
திருப்பனந்தாள்.
10—1—81

R. V. சுப்பிரமணியன்,
R. C. மானேஜர், ஸ்ரீகாசிமடம்.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்



# அருள் பழுத்த கனிச்சுவை

எண்பத்து நான்கு லட்சம் யோனி பேதங்களாகிய வயல்களில் ஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அவர்கள் மாநிலம் புரக்க உழவு செய்கிறார் என்று பார்த்தோம். உழவுக்கு நீர் வேண்டும். நீர் நிலையிலிருந்து மதகுகள் வழியாக வாய்க்காலுக்கு வந்து வயலின் மடைவழியாகப் பாய்ந்து வயலில் நீர் தேங்க வேண்டும். இந்த நீர்ப் பாசனம் ஸ்ரீ மாசிலாமணி தேசிகரின் ஞான உழவில் எவ்வாறு நடை பெறுகிறது என்று பார்ப்போம்.

போகம் என்பது புதுவெள்ளம். போகம் - துய்த்தல். அனுபவம் என்னும் நீரினால்தான் உயிர்களின் வினைகள் வளர்கின்றது. இன்பத்தை அனுபவிப்பதும் அனுபவம் தான். துன்பத்தை அனுபவிப்பதும் அனுபவம்தான்.

இந்த அனுபவ உணர்வு ஜீவர்களுக்கு ஊழ்வழிப் பட்டதாக வருகிறது. எனவேதான் ஊழை நீர்நிலை என்கிறார் சுவாமிகள். தெய்வப்புலமைத் திருவள்ளுவர் வற்புறுத்திய பெரிய சக்தி ஊழ். 'ஊழிற் பெருவலி யாவுள?' என்கிறார் திருவள்ளுவர்.

ஊழின் வழிப்பட்டே நம் போகங்கள்-துய்ப்புக்கள் அமை கின்றன. எனவேதான் ஊழ் என்னும் நீர்நிலையிலேயே போகம் என்னும் புதுப்புனல் இருப்பதாக ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அறிவிக்கிறார்கள்.

இத் திருப்பாடலின் 10 வது அடியாகிய "போகம் என்னும் புதுப்புனல்" என்பதனை 6 வது அடியாகிய "ஊழெனப்பட்ட தாழ் புனல் படுகர்" என்பதனுடன் ஒரு முறை சேர்த்துக் கொள்ள வேண்டும்.

நீர்நிலையிலிருந்து அனுபவம் என்ற நீர், நேரே வயல் களுக்கு வருவது கிடையாது. பல மதகுகளில் தடைப் பட்ட பிறகுதான் வெளிவருகிறது. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் இந்த நிகழ்ச்சியாகிய வெள்ளம் தெய்விகம் முதலிய மதகுகளைக் கடந்து வருவதாக அருளுகிறார்கள். தெய்விகம் இயற்பியல், ஆன்மிகம் என்பன அவை.

ஊழ்வழிப்பட்ட நுகர்ச்சிகள் தெய்வ சங்கல்பத் தினல் நெறிப்படுத்தப் பெறலாம். உயிரின் முயற்சிகளால் வழிப்படுத்தப் பெறலாம். ஞானத்தினல் திசை மாற்றப் பெறலாம். பின்னிரண்டும் சாதனைகள் என்றும், முன் னதைச் சங்கல்பம் என்றும் ஆன்றோர் கூறுவர். சங்கல்பத் தாலும் சாதனைகளாலும் நெறிச்செலுத்தப் பெறும் நுகர்ச்சியே நற்பலன் தருவதாகும். எனவேதான் தெய் விகம் முதலா செப்பும் மதகுகளின் வழியாக, போகம் என்னும் புதுப்புனல் வருவதாக, ஸ்ரீ சுவாமிகள் தெரிவிக் கிறார்கள்.

இந்த புதுப்புனல் மூன்று மதகுகளையும் கடந்து தாகம் என்னும் வாய்க்காலுக்கு வருகிறது. தாகம் என்பது மிகுந்த ஆசை. அதற்கு வேட்கை என்று ஒரு பெயர் உண்டு. வேட்கை அற்று நுகரும் நுகர்ச்சிகள் வினை விளையக்காரணம் ஆவது இல்லை. வேட்கை அற்றநிலை ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்கும் நிலையாகும். உயிர்களின் நுகர்ச்சி வேட் கையின் வேகத்தில் அமைவதால் நீருக்கு வேகம் தருவ தாகிய வாய்க்காலாக வேட்கை வருணிக்கப்படுகிறது.

நீர்நிலையிலிருந்து புறப்பட்ட நீர் மதகுகள் வழி யாக வாய்க்காலுக்கும் வந்தாயிற்று. இனி இந்த நீர் 84

லட்சம் யோனி பேதங்களாகிய வயல்களுக்குப் பாயவேண்டும். மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்தும் பொறிகள். வயல்களில் நீர் வரும் வழியை மடை என்பார்கள். ஐம்பொறிகள் ஆகிய மடைகளின் வழியாக நுகர்ச்சி என்னும் நீர் நுழைகிறது.

உலகியலில் நாம் பார்க்கும் விவசாயத்தில் சில நுணுக்கங்கள் உள்ளன. மழை அதிகமாகப் பெய்யும் காலங்களில் வாய்க்காலின் நீரை வயலுக்குப் பாய்ச்ச வேண்டிய அவசியமில்லை. வயலின் அதிகப் படியான நீரைத்தான் வடிகால்கள் வழியாகப் புறம் போக்க வேண்டும். வான் மழை குன்றிய காலங்களில் வயல்களின் தேவையறிந்து அந்த அளவில் வாய்க்காலின் நீரை வயலுக்குப் பாய்ச்ச வேண்டும். வாய்க்காலின் நீர் மட்டத்தை உயர்த்திக்கொள்வதும், வயலில் தேவையான அளவு நீர் நிறைந்தவுடன் அந்நீர் மீண்டும் வாய்க்காலுக்கு வடிந்து விடாமல் மடை யடைத்துக் கொள்வதும் புத்திசாலித்தனங்கள். இவை தேக்குதலின் நுணுக்கங்கள்; வரன் முறைகள்.

இன்ப துன்ப நுகர்ச்சிகளை ஜீவர்களுக்குத் துய்ப்பிக்க கடவுளும் அவனின் வேறற்றவனாகிய குருநாதனும் இத் தகைய உபாயங்களைக் கையாளுகிறார்கள்.

உயிர்ப்பயிர் விளைய நுகர்ச்சிநீர்ப் பாய்ச்சுதல் தொழில் நிறைவு பெற்றது.

''ஊழெனப் பட்ட தாழ்புனற் படுகரிற்
றெய்விக முதலாச் செப்பும் மதகும்
ஒவ்வொரு மதகா யுடனுடன் றிறந்து

தாக மென்னுந் தனிப்பெருங் காலிற்
போக மென்னும் புதுப்புனல் கொணர்ந்து
பாயுமைம் பொறியாம் வாய்மடை திறந்து
பருவம் பார்த்து வரன்முறை தேக்கலும்''

[புனல்-நீர்; படுகர்-நீர் நிலை; தெய்விகம்-இறைமை; செப்பும்-புகழத் தகுந்த; தாகம்-வேட்கை; கால்-வாய்க்கால்; போகம்-நுகர்ச்சி; ஐம்பொறி-மெய், வாய், கண், மூக்கு, செவி; வரன்முறை-நெறிமுறை]

— சிவ சிவ

## தரும சாசனம் - 61, 62, 63

ஸ்ரீ லஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் சென்ற மாதம் செய்தருளிய அறக்கட்டளைகளின் குறிப்புக்கள்.

61. திருப்புனவாயிலில் கார்த்திகை இரண்டாவது சோமவாரம் சங்காபிஷேக நிதி: முதற்பொருள் - ரூ. 2,500

பாண்டி பதினன்கு தலங்களில் ஒன்ருகிய திருப்புவனவாயிலில் கார்த்திகை இரண்டாவது சோமவாரத்தன்று பெருமானுக்குச் சங்காபிஷேகம் நடத்த இம்முதற் பொருளின் வட்டித்தொகை செலவு செய்யப் பெறும்.

62. திருவாரூர் ஸ்ரீ தியாகேசர் பூசகர் படிக்காசு நிதி
சேமவைப்பு– ரூ. 12,000

இதன் வட்டி வரவைக் கொண்டு ஸ்ரீ தியாகேசப் பெருமானுக்குப் பூஜை செய்யும் சிவாசாரியாருக்கும், அவருக்கு உதவி செய்யும் உதவியாளருக்கும், நாடோறும் படிக்காசு தரப்பெறும். ஸ்ரீ தியாகராசப் பெருமானுக்கு, நறுமண மலர்கள் நாடோறும் தரப்பெறும்.

2. திருக்கோழம்பம் ) தியப்படி பூஜை உதவி நிதி
முதற்பொருள் -ரூ. 12,000

இதன் வட்டி வரவிலிருந்து திருக்கோழம்பத்தில் எழுந்தருளியுள்ள சுவாமிக்கும் அம்பாளுக்கும் நாடோறும் அபிஷேக நைவேத்தியங்கள் செய்விக்கப் பயன்படுத்தப் பெறும். ஆண்டுக்கு ஒரு முறை சுவாமிக்கும் அம்பிகைக்கும் பரிவட்டம் வாங்கி அளிக்கப் பெற்று வரும்.

இந்த அறக்கட்டளைகளுக்கான முதற்பொருள்கள் சேமவைப்புக்களில் வைக்கப் பெற்றுள்ளன. அறக்கட்டளை விவரங்கள் திருவிடைமருதூர் சார் பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்யப் பெற்றன.

# 28. பெண்மையுடன்[1] உறைவது

### தமிழாக்கம் - கோ. வன்மீகநாதன்.

எவனொருவன் ஆண்மையை உணர்ந்திருந்தும்
பெண்மை குணத்துடன் உறைகின்றானோ
அவன் உலகின் பள்ளத்தாக்கு ஆகின்றான்;
உலகின் பள்ளத்தாக்கு[2] ஆனமையால்,
அவன் சிதைவுபடாத[3] மூலப்பண்பு உடைத்தாயிருக்கிறான்,
மீண்டும் ஒருசிசுவின் (கள்ளங்கபடமற்ற)
நிலைக்குத் திரும்பி வருகிறான்.

எவனொருவன் வெள்ளையை (பிரகாசமானதை)
உணர்ந்திருந்தும்
கருப்புடன் (இருளுடன்) உறைகின்றானோ
அவன் உலகுக்கு ஓர் ஆதர்ஷ புருஷனாகின்றான்;
உலகுக்கு ஆதர்ஷ புருஷனாகயிருப்பதால்
அவன் என்றுமே பிழை செய்யாத
சாசுவத சக்தியைக் கொண்டிருக்கிறான்,
மீண்டும் ஆதி யாதுமின்மை நிலைக்குத் திரும்புகிறான்.

எவனொருவன் பேரையும் புகழையும் பற்றி நன்றாக
அறிந்திருந்தும்
மூலை முடுக்கில் யாவரும் தெரியாமல் மறைந்து இருந்து வருகிறானோ
அவன் உலகத்தின் பள்ளத்தாக்கு ஆகின்றான்.
உலகின் பள்ளத்தாக்காக இருந்தமையால்
எப்பொழுதும் போதுமானதாயிருக்கும் சாசுவதமான
ஆற்றலை உடைத்தாயிருக்கிறான்,
பொள்ளப்படாத[3] மரத்தின் இயல்பான முழுமை நிலைக்குத்
திரும்புகிறான்.

இந்தப் பொள்ளப்படாத மரத்தைத் துண்டு போடு;
அது ஒரு பாத்திரமாக உருவாக்கப் படுகிறது,

ஞானியின் கையில்
அவை அதிகாரிகளாகவும் நீதிபதிகளாகவும்[4] மாறுகின்றன,
இதனால்தான் பேரரசன் துண்டுபோடுவதில்லை.[5]

28 ஆம் அதிகாரத்தின் அடிக்குறிப்புகள்.

1. ''லௌட்ஸியின் மெய்ஞ்ஞானம்'' என்ற நூலின் நான்காம் பாகம் சிக்கலானது, அதன் அதிகாரங்களுள் இவ்வதிகாரம் மிகவும் சிக்கலானது. பூட்டின் சாவியை ஆண்சாவி, பெண்சாவி எனச் சொல்லக் கேட்டிருக்கிறோம். வார்ப்பு அச்சுகள் இரு பகுதிகளானவை. அவற்றுள் ஒன்று ஆங்கிலத்தில் ''பெண் வார்ப்பு'' என்றும் மற்றொன்று ''ஆண் வார்ப்பு'' என்றும் சொல்லப்படும். பெண்மைப் பண்பின் தன்மைகள் கொள்கலனாகயிருத்தல், பெற்றுக்கொள்வதாக இருத்தல், கிளர்ச்சியின்றி இயக்கமின்றி ''தெவமே'' என்று இருத்தல், எதிர்ப்பின்றி வன்மையைச் சகித்துச் கொள்ளுதல். அரசின் வன்முறை யை வன்முறையால்எதிர்க்காமல் எல்லாவற்றையும் சகித்துக்கொண்டு சும்மா இருத்தலால் போராடுதல் ஆங்கிலத்தில் passiue resistance என்றும் இந்திய மொழிகளில் சத்தியாக்கிரகம் என்றும் அழைக்கப் படுவதை நினைவு கூரவும்.

2. இப்பண்பிற்கு எடுத்துக்காட்டாகபள்ளத்தாக்கைக் கூறுவர் சீன மொழியில். காட்டாறுகளும் மலையாறுகளும் தன்னை அறுத்துச் செல்லப் பள்ளத்தாக்கு யாதொரு போராட்டமும் இன்றி அமைதி யாக நின்று ஆற்றில் தாக்கலை ஏற்கிறது. ஞானியானவன் மழை, வெயில், காற்று, பசி, மக்களின் இசை வசை எல்லாவற்றையும் பொருட்படுத்தாமலும், புகழை நாடாமலும், மறைந்து வாழ்கிறான், ஆகையால் அவன் தன் மூலப்பண்பை இழப்பதில்லை. பள்ளத்தாக்குகள் இப்படி செயல்துறந்து கிடந்தும், அவைதான் மிக செழிப்பான பலனை உலகுக்கு அளிக்கின்றன என்பதை இங்கு நினைவிற்கொண்டால் பயனாகும்.

3. பொள்ளப்படாதமரம் — மாணிக்கவாசகர் ''பொல்லா மணியேயோ'' என்கின்றாரே இதே பொருள்தான் இச்சொற்றொடரும் கொண்டுள்ளது.

4. இவர்களை இன்று ஆங்கிலத்தில் Bureaucrats என்பர். இவர்கள் மக்களுக்கு நன்மை பயப்பதற்கு மாறாகக் கொடுமை விளை விக்கிறார்கள் என்பது கருத்து.

5. தானே கவனிப்பான், ஆட்சியைப்பிறர் கையில் ஒப்படைக்க மாட்டான் என்பது பொருள்.

அறிக்கை எண்: 2

# அழைப்பின் பலன்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

## முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அன்பர்களே,

நம் திருக்கோயில்களின் நன்மைக்காகவும் சிவாச்சாரியார்கள் ஓதுவாமூர்த்திகள் வாழ்க்கை வளத்துக்காகவும் பிற ஆத்திகப் பணிகளுக்காகவும் மாபெரும் நிதி ஒன்று ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் 'அன்பர்களுக்கு ஓர் அவசர அழைப்பு' என்ற தலைப்பிட்டு ஓர் அறிக்கை வெளியிட்டிருந்தோம். அதனைக் கண்ணுற்றுப் பல அன்பர்கள் ஆர்வம் செறிந்த கடிதங்கள் எழுதியுள்ளார்கள். அக் கடிதங்கள் நம்மைப் பெரிதும் உற்சாகப் படுத்துகின்றன. திருமுருக கிருபானந்த வாரியார் 'நமது பழமையான ஆலயங்களின் அவல நிலையையெண்ணிப் பெரிதும் வருந்துகின்றேன். தாங்கள் அனுப்பிய பத்திரிக்கைகளைப் பலரிடமும் தந்து அனுகூலம் உண்டாக முயற்சிப்பேன்' என்று எழுதியுள்ளார். பல மன்றங்கள், சங்கங்களிலிருந்து இப் பணிகளுக்கு நல்லாதரவு தெரிவித்துக் கடிதங்கள் வந்துள்ளன. ஓர் அன்பர் ஆவேசமாகவே கடிதம் எழுதியுள்ளார். அந்தக் கடிதத்தின் சாரம் 'அரசுகளின் தலையீடுகளால் இந்த நிதி விரயமாகுமா? என்பதுதான். அதைப் போன்ற விரயங்கள் எழவேண்டிய அவசியமில்லை. இந்த நிதியின் ஒரு காசு கூட நம் அறிக்கையில் கண்ட நோக்கங்கள் அல்லாத பிறவற்றிற்குச் செலவு செய்யப்பட

மாட்டாது என்பதற்கு நாம் உறுதி கூறுகிறோம். கோவையிலிருந்து பெயர் குறிப்பிடப்படாத ஒரு கடிதமும் 10 ரூபாயும் வந்தது. அந்தக் கடிதத்தில் 'நான் ஒரு கல்லூரி மாணவி நான் என் தோழிகளிடமும் உறவினர்களிடமும் இத்திருப் பணிக்கு உதவ எடுத்துக் கூறி இயன்ற அளவு முயல்வேன்' என்ற வாசகங்கள் இருந்தன. நம் சமயப்பணிகளை இளம் உள்ளங்களும் உணர்ந்திருப்பதையறிந்து பெருமிதம் அடைந்தோம். இப்படியே குறிப்பிட்டுக் கொண்டு போனால் வந்திருக்கும் எல்லாக்கடிதங்களையுமே குறிப்பிட வேண்டும். எல்லாமே உணர்ச்சிக்காவியங்கள். உணர்வு வழிகாட்டிகள். இவற்றையெல்லாம் பார்க்கும்போது நாம் இப் பணிகளை இந்த ரீதியில் காலந்தாழ்ந்துதான் தொடங்கியிருக்கிறோமோ? என்று எண்ணத் தோன்றுகிறது. நிதியனுப்பிய அன்பர்களுக்கு நம் நல்லாசியும் செந்திற் கந்தன் திருவருளும் என்றும் உண்டு.

— சிவ சிவ

---

# ஆலய பூஜை படிக்காசு நிதிக்கு

## நன்கொடையளித்த அன்பர்கள் விபரம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் | 1008-00 |
| 2. | பெங்களூர் திரு. V. ஜெயராமய்யர் அவர்கள் | 1001-00 |
| 3. | சென்னை திரு. D. லோகநாதன் அவர்கள் | 1001-00 |
| 4. | திருச்சி திரு. A. P. அருணுசலம் செட்டியார் அவர்கள் | 501-00 |
| 5. | திருச்சி திரு. மூக்கப்பிள்ளை அவர்கள் | 251-00 |
| 6. | மாயவரம் ஞானனந்தர் வழிபாட்டுச் சங்க தலைவர் திரு. R. பாலகிருஷ்ணன் உடையார் அவர்கள் | 209-00 |
| 7. | திருப்பனந்தாள், ஸ்ரீ காசிமடம் மேலாளர் திரு. முத்து. மெய்கண்டதேவன் அவர்கள் | 103-00 |
| 8. | திருப்பனந்தாள் கயிலை சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் மேல்நிலைப் பள்ளி ஆசிரியர்கள் | 103-00 |
| 9. | அத்திப்புலியூர் திரு. சுப்பையா முதலியார் அவர்கள் | 100 00 |
| 10. | பவானி. திரு. M. A. ஆயிகவுண்டர்அவர்கள் | 100-00 |
| 11. | விருத்தாசலம் திரு. N. V. A. இரத்தினசபாபதி செட்டியார் அவர்கள் | 100-00 |
| 12. | மதுரை திரு. S. அருணுசலம் அவர்கள் | 51-00 |
| 13. | கள்ளிப்பட்டி திரு. K. P. இராமலிங்க கவுண்டர் அவர்கள் | 50-00 |
| 14. | சண்முகநாதபுரம் திரு. இலட்சுமண செட்டியார் அவர்கள் | 51-00 |
| 15. | கோழிக்குத்தி திரு. N. இராமமூர்த்தி அவர்கள் | 50-00 |
| 16. | விருத்தாசலம் திரு. P. இராமசந்திர ஓதுவார் அவர்கள் | 25-00 |

17. பெங்களூர் திரு. சதானந்த் அவர்கள் 25-00
18. பம்பாய் திரு. K. தெய்வசிகாமணி அவர்கள் 21-00
19. கும்பகோணம் திரு. B. சக்கரபாணி அவர்கள் 20-00
20. திருவனந்தபுரம் திரு. N. S. கண்ணன் அவர்கள் 15-00
21. மாயூரம் பழநிமுத்து திரு. N. S. P. சிங்கார வேலு செட்டியார் அவர்கள் 11-00
22. பாம்பே திரு. P. L. ஸ்ரீதர் அவர்கள் 11-00
23. திருச்சி திரு. S. விசுவநாதன் அவர்கள் 11-00
24. மணப்பாறை திரு. G. பாலசுப்பிரமணியன் அவர்கள் 11-00
25. கும்பகோணம் திரு. P.K.T. சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் 11-00
2 . திருநெல்வேலி திரு. கரியமாணிக்கம் அவர்கள் 10-00
27. குடந்தை ரிடையர்டு போஸ்ட்மாஸ்டர் அவர்கள் 10-00
28. குமார பாளையம் கல்லூரி மாணவி 10-00
29. ஈரோடு திரு. M. ரெத்தினம் அவர்கள் 10-00
30. கும்பகோணம் புலவர் திரு. கோவிந்தராசன் அவர்கள் 5-00
31. பண்ருட்டி திரு. வை. ஆறுமுகம் அவர்கள் 2-00



## திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம்
### புத்தக வெளியீடுகள் அனைத்தும் விற்பனை செய்ய புதிதாக அங்கீகரிக்கப் பெற்றவர்கள்

ஆங்கிரஸ S. வெங்கடேச சர்மா,
5, டெலிபோஸ்ட் காலனி
குறுக்குத்தெரு
மேற்குமாம்பலம்,
சென்னை - 33.

திரு. V. சேகர்,
செயலர்
திருவாதிரையான் திருவருட்சபை
114, ராமநாயக்கன் தெரு,
நுங்கம்பாக்கம், சென்னை-34.



# முனிவர்களின் அன்பு

## கி. வா. ஜகந்நாதன்

தியாகேசப் பெருமானைத் தரிசிக்கும் பொருட்டு பல முனிவர்கள் வருகிறார்கள். அவனுடைய திருக்கோயில் வாயிலில் பெருங்கூட்டம் நிற்கிறது. வாயிலைக் காவல் புரிந்து நிற்கும் நந்தியெம் பெருமான் அவர்களை விலக்குவதற்காகத் தம் கைப்பிரம்பால் அடிக்கிறார். முனிவர்களின்மேல் அந்த அடிபடுகிறது. அவர்கள் கோப தாபங்களை விட்டொழித்துத் தெய்வத் தன்மையாகிய கருணையைப் படைத்தவர்கள்.

என்பையே அருவருக்காமல் தம் ஆபரணமாகத் தரித்திருக்கிறார் தியாகேசர். அவரைத் தரிசிக்க வந்த முனிவர்கள் தம்மேல் அடிபட்டவுடன் அதற்காகக் கோபம் கொள்ளவில்லை.

என்பு அணிந்த தென்கமலை
ஈசனார் பூங்கோயில்
முன்பணிந்த தெய்வ
முனிவோர்கள்

அவர்கள் இறைவனுடைய பெருமையையே எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பவர்கள். எது நிகழ்ந்தாலும் அந்த நிகழ்ச்சியோடு இறைவன் செயலைச் சம்பந்தப்படுத்தி எண்ணிப்பார்த்து உருகுகிறவர்கள். அவர்களுடைய அன்பு இத்தகையதென்று எடுத்துச் சொல்வது அரிது.

அன்பு என் ஆம்!

அவர்களின்மேல் நந்தியெம் பெருமானுடைய பிரம்படிபட்டவுடன் அவர்கள் முகம் சுளிக்கவில்லை. புண்பட்டோமே என்று வருந்தவில்லை. நந்தியைக் கோபிக்கவில்லை. 'இங்கே நின்று பயன் இல்லை. நாம் போய்விடுவோம்' என்றும் எண்ணவில்லை.

பின், என்ன செய்தார்கள்?

அந்த அடிபட்டவுடன் அவர்களுக்கு இறைவன் நினைவுதான் வந்தது. வந்தி தரும் பிட்டுக்காகப் பாண்டிய மன்னனுடைய பிரம்படியைப் பட்டானே இறைவன், அந்தத் திருவிளையாடலை நினைத்துப் பார்த்தார்கள். 'ஒரு பெண்ணுக்காகவும் மாணிக்கவாசகரை விடுதலை செய்விப்பதற்காகவும் பெருங்கருணையை மேற்கொண்டு எம்பெருமான் அடிபட்டானே', என்று எண்ணி உருகுகிறார்கள்.

புண் சுமந்தோம் நந்தி
புடைத்து என்னுர்;புண்ணியனுர்
மண் சுமந்தார் என்று உருகு வர்,

தம்மேல் பட்ட அடி, அவர்களுக்குத் துன்பத்தை உண்டாக்காமல் இறைவனுடைய கருணைத் திருவிளையாடலை நினைக்கச் செய்தது. துன்பம் வந்தாலும் இன்பம் வந்தாலும் சமானமாகப் பார்த்து, என்றும் இறைவனையே தியானம் செய்து இன்புறும் பெரிய பக்தர்கள் அவர்கள்.

தியாகேசர் கோயில் வாயிலில் நிற்கிறோம் என்ற பரவசத்தோடு அவர்கள் இருக்கிருர்கள். அந்த உணர்ச்சி விஞ்சியிருந்ததனுல் அடியின் உறைப்பை அவர்கள் உணர்வதேயில்லை.

ஆயிரம் பொன் தனக்குக் கிடைக்கும் என்ற உறுதியோடு ஓரிடத்துக்குச் சென்றவன் இடையில் என்ன துன்பம் வந்தாலும், பொன்னின் மேல் வைத்த ஆசையால் அந்தத் துன்பத்தைப் பொருட்படுத்த மாட்டான். தன் உயிரினும் சிறந்த காதலியைத் தேடி ஓடுகிறவன், இடையில் பாம்பு ஓடினுலும் கவனிக்காமல் செல்வான். துளசிதாசர் அப்படித் தானேசெய்தார்? தம் காதலியை அணுகுவதற்காகப் பாம்பையே கயிறு என்று எண்ணி அதையே பற்றிக்கொண்டு மதில்மேல் ஏறினுர் அல்லவா ?

அந்த நிலையில் இருப்பவர்கள் இந்த முனிவர்கள்.

என்பு அணிந்த தென்கமலை
ஈசனுர் பூங்கோயில்
முன்பணிந்த தெய்வ
முனிவோர்கள்-அன்பு என் ஆம்;
'புண்சுமந்தோம் நந்தி
புடைத்து' என்னுர்; புண்ணிய
னுர்
மண்சுமந்தார் என்று உருகுவர்.

எலும்பையே அணிகலனுக அணிந்தவரும், தென்னுட்டில் உள்ள திருவாரூரில் நித்தியவாசம் செய்பவருமாகிய தியாகேசர் திருக்கோயிற் சந்நிதிக்குமுன் பணிந்து வணங்கிய முனிவர்கள், அன்பு எத்தகையது ஆகும் என்று சொல்ல நம்மால் முடியும்? 'நந்தி தேவர் தம் பிரம்பினுல் அடிக்க, அதனுல் புண்ணுகிவிட்டது; அந்தப் புண்ணைச் சுமக்கும் இழிந்த நிலையைப் பெற்றேரும்' என்று எண்ண மாட்டார்கள். 'புண்ணிய மூர்த்தியாகிய எம் பெருமான் மண்சுமந்து அடிபட்டாரே' என்று எண்ணி மனம் உருகுவார்கள்.

அந்த முனிவர்கள் அடிபட்டவுடன் அழுவார்கள். அது தம் மேல் பட்ட அடி காரணமாக உண்டாகும் வலியினுல் எழும் அழுகை அல்ல, 'நாம் ஆசாரிய ஸ்தானத்தில் இருக்கும் நந்தி தேவர் கையால் அடியுண்டோம்; அதுவும் ஒரு புண்ணியந்தான், ஆனல் அருமையறியாத பாண்டியன் பிரம்பால் அடிக்க எம்பெருமான் அந்த அடியைப்பட்டாரே!

அப்போது எப்படி இருந்திருக்கும்? என்று எண்ணி அழும் அழுகை அது.

''வன்பு அட்ட கூடலில்
வான்பட்ட வையை
வரம்பு இட்டநின்
பொன்பட்ட மேனியில்
புண்பட்ட போதில்
புவிநடையாம்
துன்புஅட்ட வீரர்அந்
தோவாத ஆரர்தம்
தூயநெஞ்சம்
என்பட்ட தோ? இன்று கேட்ட
என் நெஞ்சம்
இடிபட்டதே''

என்று இராமலிங்க வள்ளலார் இதை நினைந்து உருகுகிறார். இதுவே சிறந்த அன்புக்கு அடையாளம்.

[என்பு—எலும்பு. அணிந்த—அணிகலனாகப் பூண்ட. தென் கமலை என்றது, திருவாரூர் தென் நாட்டில் இருப்பதைக் குறித்தது. தென் என்ற அடை இனத்தைக் குறித்து வரவில்லை. அதாவது வடகமலை ஒன்று இருக்க, அதை நீக்கவரவில்லை. இதை இனச் சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க் கொடை என்று சொல்வார்கள். திருவாரூர்த் திருக் கோயிலுக்குப் பூங்கோயில் என்று பெயர். ''தேங்காவி நாறும் திருவாரூர்த் தொன்னகரில், பூங் கோயிலுள் மகிழ்ந்து போகா திருந்தாரே'' என்பது அப்பர் தேவாரம்]

தெய்வ முனிவோர்கள் - தெய்வத் தன்மையை உடைய முனிவர்கள்; தெய்வத் தன்மையாவது அருள். அன்பு என்னும் - தலையான அந்த அன்பு எத்தகையதாம்; சொல்லால் விளக்குவதற்கரியது என்றபடி. 'நந்தி புடைத்துப் புண் சுமந்தோம்' என்றார். புடைத்து-புடைக்க; எச்சத்திரிபு. புண்ணியனார் - புண்ணியமே வடிவமாக உள்ளவர்; பக்தர்கள் செய்த புண்ணியமெல்லாம் திரண்டு இந்த உருவோடு வந்து காட்சியளிக்கிறது என்று சொல்லும்படி கோலம் காட்டுபவர். முசுகுந்தன் முதலியோர் செய்த புண்ணியப் பயனாகத் தியாகேசர் திருவாரூருக்கு எழுந்தருளிக் கோயில் கொண்டார். அவர்கள் செய்த புண்ணியப் பயனை நாமும் அநுபவிக்கிறோம்.

புண்ணியனார்: ''பொதுநடத்தரசே புண்ணியனே'' என்பது திருவருட்பா. ''நவையறு குணங்களென்னும் பூணெலாம் பொறுத்த மேனிப் புண்ணிய மூர்த்தி'' என்று இராமனைச் சொல்வார் கம்பர்.

மண் சுமந்து அடிபட்டதையே முனிவர்கள் எண்ணி உருகினார்கள். ஆனால் தம் வாயால் அடிபட்டதைச் சொல்ல நாஎழாமல், மண் சுமந்தார் என்ற அளவில் நிறுத்திக்கொண்டார்கள். அதுவும் அவர்களுடைய பேரன்பைக் காட்டுகிறது. என்று—என்று எண்ணியும் சொல்லியும்.

'முனிவோர்கள், புடைத்துப் புண் சுமந்தோம் என்றார்; புண்ணியனார் மண் சுமந்தார் என்று உருகுவார்' என்று கூட்டிப் பொருள் செய்க.

இது திருவாரூர் நான்மணி மாலையில் உள்ள 14ஆவது பாட்டு.

# "சித்தாந்த சாத்திரங்கள்"

## மு. அருணாசலம்

இவர் திருவாரூர் புராணத்தை 1894 இல் அச்சிட்டார். பின் இப்புராணசங்கரகம் செய்தார். திருவாரூரிலுந் திருச்சிராப்பள்ளியிலு மிருந்த வணிகர்கள் இவரை ஊக்குவித்தார்கள் என்று கருதலாம். மதுரை ஜில்லா பள்ளத்தூர் க. ப. குமரப்ப செட்டியார் பொருள் உதவியால் திருவாரூர்க் குருபூஜை மடம் சைவப்பிரகாச வித்யா சாலை தலைமை உபாத்தியாயர் உ. பொன்னம்பல பட்டாரகரால் நாகையில் இந்நூல் 1896இல் அச்சிடப்பெற்றது. இந்நூலுக்குச் சிறப் புப்பாயிரம் அளித்தவர்கள் தேவகோட்டை வித்துவான் லெ. சின்னையா செட்டியாரும் சிங்கவனம் மகாவித்துவான் சுப்பு பாரதி குமாரர் சுந்தரேச பாரதியாரும். நூல் அச்சிடுங்காலத்து இவர் உயிர் வாழ்ந்து இருக்கிறார். இவரைக் குறித்த செய்திகள் சிறப்புப் பாயிரங்களால் தெரிய வருவன.

... ... ... ...அகத்தியன் மரபோன்
ஆங்கதற் கேற்ப ஓங்குதமி ழென்றும்
தேங்கட லதனை வாங்கி யுண்டோன்.
... ... ... ... ... ... ... ... ...
கமலையம் பதியில் அமலையுடன் எழுந்தருள்
தியாகர்க் குணத்தைத் தியாகஞ் செய்வள்ளல்.

என்று சுந்தரேச பாரதியார் பாடியது மிக்க நயமாயுள்ளது.

பிற்காலத்தில் சந்தானசாரியர் வரலாறு எழுதினோர் அனைவரும் சாமிநாத தேசிகர் கூற்றையே எழுதி வருகிறார்கள். சித்தாந்த சாத்திரங்கள் யாவை என்ற விளக்கம் இவர் நூலில் சொல்லப்படவில்லை.

இச் சந்தானசாரியர் வரலாற்றில் ஒரு பொருள் நன்கு கருத்தில் இருத்தத்தக்கது. முதல் ஆசாரியரான மெய்கண்டார் வேளாளர்; அவர் மாணாக்கரான அருணந்தி சிவம் சிவாசாரியார். அவர் மாணாக்கரான மறைஞானசம்பந்தர் சைவரல்லர், ஸ்மார்த்தப் பிராமணர். இவரை அருணந்திசிவம் ஆட்கொண்ட போது

தீட்சையால் சைவராக்கியிருக்கிறார். [1]பிராமணர் தீட்சைபெற்று சைவராகும் போது, அவருக்குப், பெயர் மகா சைவர் (சிவாசாரியார்-ஆதிசைவர்) இவருடைய மாணாக்கரான உமாபதி சிவம், நடராசர் பூஜை செய்யும் உரிமையுடைய சிவாசாரியர், அல்லது தில்லை வாழந்தணர்; இன்று இவ்வகையார் தீட்சிதர் என்று சொல்லப் பெறுகிறார்கள். இருப்பினும்இவர்களும்சிவாசாரியரே. ஆதிசைவரென இந்நால்வருள் முதல்வர் சைவர். மூன்றுமவர் மகாசைவர். ஏனைய இருவரும் ஆதிசைவர்.

சித்தாந்த சாத்திர முதற் பதிப்பு

ஏடுகளில் இச்சாத்திரப் பெயர் தொகுப்பாகச் சொல்லப்பட்டு இருந்த போதிலும், இதன் முதல் பதிப்பின - தொகுப்பான பெயர் சொல்லப்பட வில்லை. முதன் முதல் நான்கு சாத்திரங்களைத்திரிசிரபுரம் மதுரை நாயகம் பிள்ளை[2] என்பவர் அச்சிட்டார். ஆண்டு அட்சய வருடம் ஐப்பசி மாதம். (1866 அக்டோபர்). இவரைப்பற்றி ஐய ரவர்கள் குறிப்பிட்டு இருப்பது:

''இவர் இலக்கிய இலக்கணங்களிலும் மெய்கண்ட சாத்திரங் களிலும் நல்ல பயிற்சியுடையவர்; முதன் முதலாக மெய்கண்ட சாத்திரங்களைப் பதிப்பித்தவர் இவரே''. ஐயரவர்கள் இவரைத் தாம் நேரில் கண்டதாகக் குறிப்பிடவில்லை. அவர்கள் மகாவித்துவா னிடம் மாணாக்கராகச் சேர்ந்தது 1870இல்.

மதுரை நாயகம் பிள்ளை சிவஞான போதம் ஒரு புத்தகமாகவும், சித்தியார் பரபக்கம், சுபக்கம், சிவப்பிரகாசம், வினாவெண்பா ஒரு புத்தகமாகவும் இருபகுதிகளாக அச்சிட்டு நன்றாகக் கட்டிடம் கட்டி

வெளியிட்டனர் (தொடரும்)

1. இவ்வாறு பிற சமயத்துள்ளாரைத் தீட்சையால் தம் மதத்தி னராக்குவதை வைணவத்திலும் காண்கிறோம். நஞ்சியர் வேதாந்தப் பிராமணராயிருந்து பட்டரால் திருத்தி ஆட்கொள்ளப்பெற்று ஸ்ரீவைணவரானார். நம்பூர் வரதராசன் என்ற ஸ்மார்த்தப்பிராமணர் இந்த நஞ்சியரால் தீட்சை செய்து ஆட்கொள்ளப்பெற்று நம்பிள்ளை என்ற பெயரோடு ஸ்ரீ வைணவராகி அடுத்த ஆசாரிய பதவியைப் பெறுகிறார்.

2. மதுரை நாயகம் பிள்ளை பெயரை ஐயரவர்கள் மகாவித்து வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை வரலாற்றில் மருதநாயகம் பிள்ளை என்று குறிப்பிட்டு இருப்பது பிழையாகும்.

52 விடையரங்கம் 25

வினா: திருஞானசம்பந்த சுவாமிகள் நின்றசீர் நெடுமாறனின் உத்தரவைத் தடுக்காதது ஏன்? சேக்கிழாரின் காரணத்தோடு சிந்தனையை நிறுத்தினால் போதுமா? நினைப்புக்கு இவ்வளவு பெரியதண்டனையா?

விடை:

வ. பாலசுப்பிரமணியன்

நல்லதொரு குடும்பம் பல்கலைக் கழகம் என்பார்கள் அப்படிப்பட்ட குடும்பத்தில் தலைவன் ஒரு கட்சி; தலைவி ஒரு கட்சி; வேலைக்காரன் ஒரு கட்சி என்றிருந்தால் எப்படி இருக்கும்? அப்படித்தான் பாண்டி நாடும் அப்போது இருந்தது. மன்னன் சமண சமயத்தைச் சார்ந்தவன். அவனது மனைவி மங்கையர்க்கரசியும், அமைச்சர் குலச்சிறையாரும், சைவ சமயத்தினர். "மன்னன் வழித்தே பன்பதை உலகம், மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி" என்பதற்கொப்ப மக்களும் ஆளுக்கொரு சமய வழியைக் கடைப் பிடித்தொழுகிய காரணத்தால், அன்றைய பாண்டி நாட்டுச் சமுதாயம் கட்டுப்பாடற்ற – ஒழுங்கற்ற – சமுதாயமாக இருந்து வந்தது. கன்னி நாடு அமணர் தம்மாற் கட்டழிந்து, இழிந்து, மன்னனும் அவர்கள் மாயத்து அழுந்தி இருந்ததால் மன வருத்தமுற்ற மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும், இந்நிலையை திருஞானசம்பந்தருக்கு எடுத்துச் சொல்ல தூது அனுப்புகின்றனர் திருமுறைக்காட்டில் அப்போது தங்கியிருந்த ஞானசம்பந்தருடன் திருநாவுக்கரசரும் இருக்கிறார். அப்பருக்கு அமணர்கள் இழைத்த கொடுமைகளை அப்போது ஞானசம்பந்தர் அறிந்திருந்தார். நீற்றறையில் இட்டதும், நஞ்சிட்டதும், கொல் களிறை விட்டுக் கொல்ல நினைத்ததுவும், கல்லுடன் பாசம் பிணைத்துக் கடலிடைப் பாய்ச்சியதும் ஆகிய கொடுஞ் செயல்களை அப்பரிடம் நேரில் கேட்டு அறிந்திருக்கிறார். கிரகநிலை சரியில்லை போகவேண்டாம் என்று தடுத்தும், அவரை அமர்த்தி கோளறு திருப்பதிகம் பாடி விடைபெற்று மதுரைக்குக் கிளம்பிவிடுகிறார். சம்பந்தர் ஆலவாய் வந்துற்ற போது நிலைமை சரியில்லை. மதுரையில் அவர் தங்கியிருந்த திருமடம் அமணர்களால் தீக்கிரையாக்கப்படுகிறது. வன்முறையாளர்களை ஒறுத்தல் வேந்தர்கடன். ஆனால் பாண்டி

யன் அவர்களைத் தண்டிக்கவில்லை ஆகவேதான் சப்பந்தர் சைவர் வாழ் மடத்துக்கு அமணர்கள் இட்ட தீந்தழல் பையவே சென்று பாண்டியர்க்காகெனப் பணித் தார்பாண்டியன் வெப்புநோய்க்கு ஆளானான். எப்படியோ நோய் தீர்ந்தால் போதும் என்ற நிலை அரசனுக்கு - எந்தச் சமயமும் உயர்ந்தது என்ற போட்டி அமண ருக்கும் சைவருக்கும் அரசனது உடலை இருவரும் பங்கு போட்டுக் கொண்டு நோய்தீர்க்க முற்பட்ட னர். வாமபாகத்தில் ஏற்பட்ட நோயைத் தீர்க்க அமணர் முயன் றனர். மயிற் பீலியால் தடவி மந்திரம் ஓதியும் முடியவில்லை. சொற்றமிழ் விரகரோ கொற்ற வன் உடலின் வலப்பாகத்தில் நீற்றினைத் தடவி ''மந்திரமாவது நீறு'' பதிகம் ஓதி நோயினைத் தீர்த்தருளினார். பின், அவர் களால் முடியாத வாமபாகத்து நோயையும் தீர்த்தார் அமணர்க்கு ஏற்பட்ட முதல் தோல்வி இது. பெரியதொடு போரில் வலிமை மிக்க எதிரியின் கை வலுத்து, தோல்வி நிச்சயம் என்பது தெரிந்த பின்பும் எதிர்த் துப் போராடுவது சிறந்த இராஜதந்திரம் அல்ல. தோல்வியை அப்போதே ஒப்புக் கொண்டு ஒதுங்கி இருந்திருக்க லாம் அமணர்கள். ஆனால் அவர் கள் அப்படி இல்லை. எதிர்த்து நிற்கவே விரும்பினர். அனல் வாதில் இரண்டாவது தோல்வி ஏற்பட்டது. அப்பொழுதும் அவர் கள் விடவில்லை. புனல்வாதுக் கழைத்தனர். ''இந்தப் போட்டி யிலும் நாம் தோற்றால் அரசன் நம்மைக் கழுவிலேற்றிவிடு வான்'' என்று வாய்சோர்ந்து அவர்களே கூறிவிடுகிறார்கள். அதைக்கேட்ட மன்னன் ''செற் றத்தால் உரைத்தீர்; உங்கள் செய்கையும் மறந்தீர்'' என்றே உரைக்கிறான். ''நுணலும் தன் வாயாற் கெடும்'' என்பதுபோல் தண்டனை பற்றிய பேச்சே இல் லாத போது, அமணர்கள் தங் களுக்குரிய தண்டனையைத் தாங் களே தேடிக் கொள்கின்றனர். புனல் வாதில் மூன்றாவது தோல் வியும் ஏற்படுகிறது. பாண்டிய னுக்கு ஒரே எரிச்சல். தான் சார்ந் திருந்த சமயத்தினர் வெறும் வன்முறையாளர்களே என்ற எண்ணம் அப்போதுதான் அவ னுக்குத் தோன்றுகிறது. வாய் சோர்ந்து அவர்கள் சொன்ன தண்டனையையே அமணர்கட்கு அளிக்கிறான் ஆகவே, அமணர்கள் தங்களுக்குரிய தண்டனையைத் தாங் களே தேடிக்கொண்டனர் என்றே கொள்ளுதல் வேண்டும்.

குற்றம் செய்வாரை அரசன் தான் தண்டிக்க வேண்டும் துறவிக்கு அரசி யலில் தலையிட உரிமை இல்லை. அது இன்றளவும் இருந்து வரும் கோட் பாடு ஆகும். ''கழுவேற்றுவது'' அவருக்கு உடன்பாடில்லையா யினும், சைவர் வாழ் மடத்துக்கு

தீங்கு செய்தமையால், மிகை யிலா வேந்தன் செய்கை சாலு மென்று விலக்கிடாதிருந்தார் என்று சேக்கிழார் பெருமான் நயம்பட உரைத்தார்.

வே. க. இலக்ஷுலிங்கம்

திருஞானசம்பந்த சுவாமிகள் ஸ்கந்த யோகத்தைச் சேர்ந்தவர். மும்மலம் அழிந்தவர். நாம் உய் யும் பொருட்டு சிவபெருமானுல் இப்பூவுலகத்துக்கு அனுப்பப் பட்டார். நமக்கு உள்ளது பசு ஞானம். அவருக்கு உள்ளது பதி ஞானம். நபபோல் பசு ஞானம் மட்டும் உடையவராயிருந்தால் நின்றசீர்நெடுமாறன் உத்தர வைத் தடை செய்திருப்பார்.

சேக்கிழாரின் காரணத்தோடு சிந்தனையை நிறுத்தினுல்தான் நமக்கு சைவசித்தாந்தக் கருத்துக் கள் புலன் ஆகும்.

தீ வைப்புக்குத் தண்டனை, அர சன் தன் இச்சையால் விதித்திருந் தால், இவ்வளவு பெரிய தண் டனை கொடுத்திருக்கமாட்டான். ஆனுல் இவ்வளவு பெரிய தண் டனை நேர்ந்ததற்குக் காரணம் ''ஊழ்-வல்வினை''. சமணர்கள் முன்பு பல பிறவிகளில் செய்த பலகுற்றங்களுக்குத்தண்டனை இப் பிறவியில் ஏற்பட்டது. சிலப்பதி காரத்தில் குற்றம் செய்யாத கோவலன் கொலையுண்டான். இது அவனுக்கு 'ஊழ்-வினையால்' ஏற்பட்டது. அதேபோல இந்த சமணர்களுக்கும் ஏற்பட்டது.

வல்வினை காரணமாக இந்த பெரியதண்டனையைச் சமணர்கள் தாமே தங்களுக்கு விதித்துக் கொண்டார்கள். (பெரியபுராண செய்யுள் 2701). ....................

'தங்கள் வாய் சோர்ந்து தாமே
தனிவாதில் அழிந்தோ
மாகில்
வெங்கழு வேற்றுவானிவ்
வேந்தனே'

என்று சொன்னுர்.

மங்கையர்க்கரசியாரும் குலச் சிறையாரும் திருஞானசம்பந்த நாயனுரை அரண்மனைக்கு வரு மாறு அழைத்தபோது அவர் தான் தங்கியிருந்த மடத்தில் இருந்து நேரடியாக அரசன் அரண்மனைக்குச் செல்லவில்லை. அவர் பதி ஞானம் பெற்றவர். ஆதலால் திருவாலவாய் சென்று சேவித்து சங்கரனுர் திருவுள்ளம் எப்படிஎன்று அறிய முற்பட்டார். (பெ-பு. செய்யுள் 2639-ஆவதும் அழிவதெல்லாம் அவர் செயல்)

பதி ஞானத்தால் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனுர் சிவ பெருமானதுதிருக்குறிப்பைஅறிய லானுர். நின்றசீர்நெடுமாறன் தான் முற்பிறவியில் செய்த நல் வினைப்பயன் தற்போது அவனுக் குத் துணைசெயலாயிற்று.

இதற்குச்சான்று - பெ.பு. செய்யுள் 2631, 4-வது வரி - (வெற்று மீனவனை வெண்ணிறணிவிப்பன் விதியால் என்றுர்)

நமது சிவபெருமான் தமது கருணையால் ''பசுக்கள் - ஆன்மாக்கள்'' உய்யும் பொருட்டு அவர் அவர் செய்த வினைப்பயனை அவர் அவருக்கு ஊட்டுவிக்கிறுர். இது எதற்கு என்றுல் ஈன்ற தாய் தன் மகவு நோய் வாய்ப் பட்டபோது கசப்புமருந்து கொடுத்து மகவுக்கு நோய் திரப்பாடுபடுவது போல சிவபெருமான் (''பால் நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து நீ பாவியேனுடைய ஊனினை யுருக்கி'' என்ற திருவாசகம் - பிடித்த பத்து பாடலின் கருத்துக்கு இசைய), ஆன்மாக்களுக்கு ஏற்பட்டுள்ள அனுதிமலம் நீங்கும் பொருட்டு மறக்கருணை சிகிச்சை செய்கிறுர். இது தண்டனை என்று கூறக்கூடாது. சிவபெருமான் உயிர்களினிடத்து காட்டும் கருணையே.

க. வச்சிரவேல் முதலியார்

சமணர்கள் சிவனடியார் தங்கியிருந்த மடத்திற்குத் தீ வைத்தார்கள். அது கொலையில் முடியக் கூடியது. இதைத்தான் சேக்கிழார் அடியவர்கள்பால் ''முன்பே அணுகி தம்முற்றச் செய்தார்'' எனச் சம்பந்தர் எண்ணுவதாகக் கூறுகிறுர். அரசன் அதன் பொருட்டே சமணர்கள் அத்தனை பேரையும் கழுவேற்றுகின்றுன். வாதத்தில் தோற்றதும் குலச்சிறையார் ஒட்டியதும் உடன் நிகழ்ந்த காரணங்களே. (immediate caue) அடிப்படையில் அவர்கள் செய்துள்ள செயலுக்கே அந்தத் தண்டனை கொடுக்க அரசனுக்குக் கடமை உண்டு. ஆதலால் வேந்தன் செய்கை மிகையில்லாதாயிற்று. ஆதலால் திருஞானசம்பந்தர் அரசியலில் குறுக்கிடவில்லை. இஃது அக்காலத்திய நீதி என்பதை

''கொலையிற் கொடியாரை
வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனெடு நேர்''

என்னும் திருக்குறளால் அறியலாம்.

அதுவே இன்றும் நீதியாக உள்ளது. பலர்கூடிச் செய்ததனுல், கருத்தும் செயலும் ஒன்றுதல் பற்றி இன்றைய சட்டமும் அதைத்தான்விதிக்கின்றது. வேறு நம் சிந்தனையைச் செலுத்துதல் விரும்பத்தக்கதன்று.

கொலையில் முடிந்திருக்கும் என்பதை எண்ணியே ''அச்சம் முன்புற பின்பு முனிவுற'' எனச் சேக்கிழார் கூறியதும்,

''அஞ்சல் என்றருள் செய்யெனை'' எனத் திருஞான சம்பந்தர் முன்னரே இறைவனை வேண்டிப் பெற்றதும்.

நல்லவனுக மட்டும் இருந்தால் போதாது. அறிவு (ஞானம்) உடையவனுகவும் இருத்தல் வேண்டும்.

நன்மைக்கு ஞானம் பயன். ஞானத்திற்குத் தான் துன்பவிடும் இன்பப் பேறும் பயன். ஓர் அரசன் குரங்கின் கையில் வாளைக் கொடுத்து இங்கு ஒருவரும் வாராமல் காவலிரு எனச் சொல்லி உறங்கினதாகவும் அரசன் மேல் ஈ உட்கார அவ்ஈயை குரங்கு வெட்ட அரசனும் வெட்டுண்டான் என ஒரு கதை உண்டு. ஆதலால் நன்மைக்குரிய பயனைத் தான் நல்லவன் பெற முடியும்.

அறிவின்மையின் பயனை அவன் பெறுவது நிச்சயம். கடவுளை முன்னர் அச்சத்தால் நம்பி பின் அறிவாற் கண்டுணர்ந்து அன்பு செய்தவனுக்கே பிறவிப் பயன் உண்டாம். ஐயம் திரிபு என்பவற்ருல் கடவுள் உண்மை கொள்ளாதவன் கொண்டவனினும் தாழ்ந்தவனே.

உருத்திராக்கம் என்பது மரத்தில் விளையும் ஒரு முகம் முதலியன உடைய கொட்டைகளே. அவற்றை இறைவன் திருவருட்பேற்றிற்கு அடையாளமாகப் பெரியோர் கொண்டுள்ளனர்.

## இதமான வாழ்வுக்கு எளியவழிகள்

### கைகால் சுளுக்கு ஏற்ப்பட்டால்

அ. திராக்கோத்தை புளி சேர்த்து அரைத்துக் கொதிக்கவைத்து பற்று போட்டால் குணமாகும்.

### காலில் ஆணி விழுந்ததர்க்கு

ஆ. கோரைக் கிழங்கை தயிர்விட்டு அரைத்துக் கட்டினுல் ஆணி விழுந்த புண் ஆறும்.

### ஒற்றைத் தலைவலிக்கு

இ. குப்பைமேனி இலையின் சாரில் சுக்கை இழைத்துப் பற்று போட்டு சாம்பிராணி புகைச்சல் பிடிக்க ஒற்றைத்தலைவலி குணமாகும்

டாக்டர் N. சடையப்பன், S.M.P.

# நூல் நிறை

## மொழிக்கு மொழி தித்திக்கும்

### மூவர் தமிழ் மாலை [1-8 மாலைகள்]

[ஆசிரியர் ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா. பக்கங்கள் 66+82+82+76+64+76+85+80. விலை: முதல் ஆறு மாலைகள் ஒவ்வொன்றும் இரண்டு ரூபாய். 7, 8 மாலைகள் ஒவ்வொன்றும் மூன்று ரூபாய். கிடைக்குமிடங்கள்: 5, டெலிபோஸ்ட் காலனி, குறுக்குத் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை. 600033.

சைவத் திருமுறைகளுக்கு விரிவான பொழிப்புரை விளக்க உரைகள் நீண்ட நெடுங்காலமாக இல்லை என்பது ஒரு குறைதான் அந்தக் குறையைத் தீர்ப்பதற்காக ஆங்கீரஸ. S. வேங்கடேச சர்மா அவர்கள் செய்யும் நன்முயற்சிகளே இத்தொடர் பதிப்புக்கள் ஆகும். மூவர் தேவாரங்கள் பண்முறையாகவும் தல முறையாக வும் பதிப்பிக்கப் பெறுகின்றன. மூவர் பெருமக்கள் தலயாத்திரை செய்த முறையில் அவற்றைப் பதிப்பிக்க நினைத்த இவ்வாசிரியர் நினைவு பாராட்டப் பெற வேண்டிய புது முயற்சியாகும். திரு. வேங்கடேச சர்மா அவர்கள் சைவ சமய சாஸ்திரங்களிலும், திரு முறைகள்ிலும், புராணங்களிலும் மிகுந்த தோய்வும் ஆழ்ந்த அறி வும் பெற்றவர்கள். அத்தகைய பெரியார் இம் முயற்சியில் ஈடுபட்டு திருமுறைகளுக்கு விளக்க உரைகள் தருவது பெரிதும் வரவேற்பதற் குரிய வொன்றாகும். தேவாரம் முழுமைக்கும் இவ்வண்ணம் உரைகள் செய்து 108 நூல்களாக வெளியிட இவர் திட்டமிட்டுள்ளார். இந்த 8 நூல்களில் உள்ளன போலவே எஞ்சிய 100 நூல்களிலும் திருப்பதிகங்களுக்குப் பொழிப்புரை, விசேடவுரை முதலியனவும் பதிக வரலாறு, தலவரலாறு, புராண வரலாறு முதலியனவும் இருக்கும் என்று எதிர்பார்க்கிறேன். 108 நூல்களும் தொடர்ந்து பெற விரும்புவோர் முன்பண உதவிச் சலுகை விலையாக 158 ரூபா செலுத்தினால் வெளிவந்த உடனுக்குடன் மாலைகள் பெறும் வாய்ப் பினை இவ்வாசிரியர் அறிவித்து இருக்கிறார்.

ஆத்திக இல்லங்களிலும் இதயங்களிலும் அவசியம் இருக்க வேண்டிய வரிசை.

## ஆய்வுப் பேழை - பகுதி 1

[ஆசிரியர் திரு. கா. ம. வேங்கடராமையா M. A., பக்கங்கள் 8+156 விலை ரூபா 5. கிடைக்குமிடம் அன்னபூர்ணு பதிப்பகம், 103, வடக்கு வீதி, சிதம்பரம் 608001.]

கல்வெட்டுத்துறையில் நீண்ட நெடிய அனுபவம் கொண்ட இவ்வாசிரியர் தம் ஆராய்ச்சி முடிவுகளை ஒரு பகுதியாகத் தொகுத்து 18 கட்டுரைகள் அடங்கிய ஆய்வுப் பேழையாகத் தந்துள்ளார். இக் கட்டுரைகளில் பல இலக்கிய ஏடுகள் வாயிலாகவும், வாஞெலி வாயிலாகவும் சுவைஞர்களுக்குத் தரப் பெற்றவையே. சமய இலக்கியங்களிலும் இதிகாசங்களிலும் நம் முன்னேர்களுக்கு இருந்த பற்றுதலை இந்நூலின் பல கட்டுரைகள் விளக்குகின்றன. இயல், இசை, நாடகம் என்னும் மூன்று அங்கங்களில் செய்திகளும் வியக்கத் தகும் ஆய்வு முடிவுகளுடன் இந்நூலின் கட்டுரைகளாக உள்ளன.



## நமக்கு நல்லது

உங்கள் ஜன்ம நட்சத்திரம வரும் நாளில் ஆண்டுதோறும் உங்கள் பெயரில் ஒரு புண்ணியகாரியம் நடைபெறவேண்டும். உங்கள்பெயர் முகவரி, பிறந்த மாதம் (தமிழில்), நட்சத்திரம் ஆகிய குறிப்புக்களுடன் ரூ. 110-க்கான காசோலையும் அனுப்புங்கள். ஆண்டுதோறும், அந்தமாதம் அந்தநாளில் தஞ்சை மாவட்டம், கதிராமங்கலம் ஸ்ரீவநதுர்க்கா பரமேஸ்வரிக்கு அபிஷேக அர்ச்சனை செய்து பிரசாதம் உங்கள் முகவரிக்கு அனுப்பப்பெறும். உங்களுக்கும் ஒரு முக்கியமான கடமையுண்டு. உங்கள் முகவரி மாற்றங்களை (மாற்றங்கள் இருந்தால்) அவ்வப்போது தெரிவிக்க வேண்டும். இந்தத் திட்டத்தில் நீங்கள் பங்குள்ள விரும்பும் விருப்பதநின் வேகம் உங்கள் அதிர்ஷ்டத்தின் வேகத்தைப்பொருத்தது தொகையும்விவரங்களும்அனுப்பவேண்டிய

முகவரி:- ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள்,
அதிபர், ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் – 612 504.



# குல தெய்வம்

**'கண்ணபிரான்'**

அவன் இருகைகளையும் மார்புக்கு நேரே பிணைத்துக் கொண்டு எதிரே பத்ரகாளியைக் பார்த் தான்.

கோரைப் பற்கள். அக்னி விழி கள். கைகளிலே வெட்டுண்ட தலை கபால ஓடு சூலாயுதம் காலடி யில் ஒரு மாபாஷி

இது சிலையா? கடவுளா?

உண்மையிலே இதற்கு சக்தி இருக்கிறதா?

அவன் முன்பு நம்பியதேயில்லை கும்பிட்டதில்லை.

திருமணமாகி இரண்டு குழந் தைகள் பிறந்தது. இரண்டும் ஒரு வயதை எட்டிய பின் காய்ச்சல் கண்டு உயிர் விட்டன.

மூன்ருவதும் பிறந்து இப்போது காய்ச்சல்கண்டிருக்கிறது. உதவிக் கு வந்த அம்மாதான் சொன் ஞள்.

"டேய் குலதெய்வத்தை மறக் கக் கூடாதுப்பா. அந்த ரெண்டுக் கும் ச லூ ன் ல மொட்டை அடிச்சே...... இதுக்காவது நம்ம குலதெய்வத்துக்கு மொட்டை அடிக்கிறேன்னு வேண்டிக்க எல் லாம் சரியாயிடும்.

அவன் அப்போதைக்குக் கேலி யாகச்சிரித்தாலும் பின்புயோசிக்க ஆரம்பித்தான். குழந்தைக்குக் காய்ச்சல் விட்டதாக இல்லை.

வேண்டிதான் பாப்போமே என்று மனசுக்குள் வேண்டிக் கொண்டான். போய்த்தான் பார்ப்போமே என்று வந்து விட் டான்.

பாதி நம்பிக்கை. பாதி அவ நம்பிக்கையில் தவித்துக்கொண்டி ருக்கிருன்.

அருளுக்கும் கருணைக்கும் அன் பிற்கும் இருப்பிடம் என்று வர்ணிக்கப்படும் கடவுளே, நீ கூடவா மனிதர் செய்யும் சிறு தவறுகளுக்கும் பயங்கரமாக தண்டனை அளிப்பாய்'

அவன் பத்ரகாளியையே பார்த் துக் கொண்டிருந்தான்.

காய்ச்சல் விட்டதும் என் குழந்தைக்குமுதல்மொட்டையை உன் சன்னதியிலேயே போடு கிறேன். இந்தக் குழந்தையைத் தக்க விடு.

வெளி வந்து காளியைப் பார்த் தான். பலிபீடத்தைத் தாண்டிப் போய் நின்று பார்த்தான். பிர காரத்தை ஒரு முறை சுற்றி வந்து பார்த்தான்.

"சார் யாடு...புதுசா இருக்கே" குருக்கள் கேட்டார். காவி அழுக்கேறிய பஞ்சகச்சம். நரை கண்ட குடுமி.

''நான் பக்கத்து ஊரு... திருவிடைமருதூர்''

ஓஹோ ... என்ன திடீர்னு இந்தப் பக்கம்''

அவனுடைய சந்தேகத்தை இவரிடமே கேட்டு விட்டால்? அவன் விளக்கினுன் தன்னுடைய முந்தைய மனப்பான்மையும் இப்போதைய மனமாற்றத்தையும். பின்பு சந்தேகத்தையும் கேட்டான்.

''இப்படி உட்காருங்க சொல்றேன''.

குருக்கள் உட்கார அவனும் உட்கார்ந்தான்.

''ஒரு பையன் வீட்டிலேயே திருடிடறுன். தாயார் என்ன செய்யிரு? அவனே அடிக்கிரு. கண்டிக்கிரு அப்புறமா அவனே அடிச்சதுக்காகதானே வருத்தப் படரு சாப்பிடவாடான்னு வருந்தி கூப்பிடரு தாயார் தம் பையனே அருவெறுப்பா கண்டிப்பாளோ? மாட்டா... அதே மாதிரிதான் இந்த பெரிய தாயாரும். ... இன்னோர் உதாரணம் தரேன் . ஒருபையன் கல்யாணம் ஆனுன்ன பொண்டாட்டி பக்கம் சாய்ஞ்சி அம்மாகிட்ட பிரியமா இல்லேன்னு அப்ப தான் பெத்த பிள்ளேன்னு கூட கருதாம வெறுக்கிருளா இல்லியா...சாபம் கொடுக்கிருளா இல்லியா...இந்த தாயாரும் உங்க அன்பை விரும்பரு. நீங்க அலட்சியம் செய்யும் போது தண்டிச்சி தங்கிட்ட அன்பு காட்டும்படி செய்யிரு ... தோ பாருங்க... நாத்திக மனப்பான்மைங்கிறது கொஞ்ச காலம் தான் இருக்கும். அப்புறமா மாறிடுவா. நானும் எத்தனேயோ பேரைப் பார்த்துட்டேன். முன்ன புள்ளேயாரை ஒடச்சவா இப்ப தேங்கா உடைக்கிரு. நான் கூட வறுமையினுல ரொம்ப கஷ்டப் படும் போது சண்டாளின்னு கூட திட்டியிருக்கேன் அது ஒரு க்ஷணம் தான். அதுக்கான தண்டனேயும் நான் அனுபவிச்சிருப்பேன் அல்லது இனிமே அனுபவிப்பேன். ..

குருக்கள் சற்று நேரம் பேசி ஒய்ந்தார்.

அவன் புறப்பட்டான். பாதி வழி மண் பாதையில் நடந்திருப்பான்.

திடீரென அவன் கண் முன்னே பாதையில் அவன் அருகில் நாகம் ஒன்று படத்துடன் சீறியது

அவன் திடுகிட்டு பின்வாங்கினுன்.

இப்போது பார்த்தால் ஒன்றுமேயில்லே.

பிரமையா?

சற்று முன் பார்த்தது பிரமையா?

எது பிரமை?

எது உண்மை?

திரும்பி கோயிலைப் பார்த்தான். கோபுரத்தைப்பார்த்தான்.

'என் குல தெய்வமே'

அமைதியுடன் திரும்பி நடந்தான்.

வீட்டை அடைந்ததும் அவன் மனைவி சொன்னாள்.

''புள்ளைக்கு ஜொரம் விட்டிருக்குங்க இப்பதான் முணு முணுப்பு ஓஞ்சி தூங்க ஆரம்பிச்சிருக்கான்''

அவன் கையில் பிடித்திருந்த விபூதி குங்கும பொட்டலத்தை அவளிடம் நீட்டினான்.







# திருமுறை ஒவியம்

வித்துவான் :- நா. குருசாமி தேசிகர்

திருஞானசம்பந்தப் பெருமான் தில்லையை அடைகின்றார். திருச்சிற்றம்பலவனைக் கண்டு வணங்குகின்றார். அவருடைய திருவுள்ளத்தில் திருவருள் உணர்வு குமிழியிடுகின்றது. வணங்குவது வாழ்வைத்தரும்: வளத்தை நல்கும்: பாவமும் நீங்கும் என்ற முடிபான கருத்தைத் திருவருள் வெளிப்படுத்தத் துடிக்கின்றது.

தில்லைக் கூத்தப்பெருமானை வாழ்வின் முதலாக எண்ணுபவர்க்கு- திருப்பாதமே துணை எனத் தொடர்பவர்க்கு- பாவம் பற்றாது- என்ற எண்ணம் உருவாகின்றது. குணம் குறியற்ற முழுமுதலாகிய ஆண்டவனைப் பற்றியவர்க்குப் 'பாவம் பற்றாது' என்பதனைச் சிதம்பரத்தில் வாழ்கின்ற தில்லை வாழந்தணர்கள் வாழ்வால் அறியவைக்கின்றார்.

தில்லைவாழ் அந்தணர்கள் வேத வேள்வி செய்து கலிவாராமல் கடனாற்றுகின்றனர். அவர்கள் வாழும் பகுதியில் பாவத்தின் சாயல் அணுவளவும் பற்றுவதற்கு வாய்ப்பில்லை.

நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை- என்ற பழமொழிப்படி நாடுவாழ வேள்வி செய்கின்றனர்; அவர்கள் திருப்பணியால் தில்லை விளக்கம் பெறுகின்றது; அன்பும் அருளும் மல்கிய நகரில் பாவம் நிகழ வழி ஏது?

அந்தணர்கள் பலர் உண்டு; அவர்களில் பலர் கற்றது போதும் என இருப்பர்; கற்றதைச் செயலில் காட்டுவதே தவறு என்று கிரியைகளில் நம்பிக்கையின்மை தெரிவிப்பர். ஆனல் தில்லை வாழந்தணர்கள் வாணாள் முழுவதும் கற்பவர்கள். கிரியைகளில் நம்பிக்கை உடையவர். அகிலமும் நலம் பெற வேண்டும் என்று நாடோறும் இறைவனை ஆராதிப்பர்.

தில்லை அந்தணர்கள் யானென என்னும் செருக்கற்று எரி ஒப்பும் சிறப்பினர். தவஒழுக்கம் மிக்க சீலத்தவர். திருவட்செல்வர்கள். இத்தகைய அந்தணர்களைத் திருவள்ளுவர்,

'அந்தணர் என்போர் அறவோர்
மற்று எவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டு ஒழுகலான்'

என்று பொதுவாக விதந்து ஓதினர். திருஞானசம்பந்தர் சிறப்

பாக எடுத்து தில்லை வாழந்தணர்களை இக்குறளுக்குள் அடக்குகின்றார். இவ் வந்தணர்களைச் 'செற்றார்' என்று சிறப்பிக்கின்றார். உயிர்களுக்கு இயல்பாகிய காமக் குரோதம் முதலாகியகுற்றங்களைச் செற்றவர் என்று விளக்கம் செய்கின்றார். இத்தில்லை வாழந்தணரே அறவோர் ஆவார்.

முதல்வன் என்ற சொல் சிவபெருமானையேகுறிக்கும். சிவபெருமானே உயிர்களுக்குப் போகம் வீடுதரும் அதிகாரம் உடையவன. வள்ளன்மை உடையவன. இவ்வுண்மை திங்கட் செல்வன் சாபம் பெற்று மற்றையோரால் அது திராது சிவபெருமானைச் சார்ந்ததனாலேயே தீர்ந்தது புராணவரலாறு. ஆதலால் சிவபெருமான் முதலாவதாகக் கருதப்படுவான்.

மணிவாசகப் பெருமான் 'வாழ்முதலாகிய பொருள்' என்று சிவபெருமானைச் சிந்திப்பார். முதல் இலார்க்கு ஊதியம் இல்லை என்பது தமிழ்நெறி. ஆதலால் மற்ற தெய்வங்களைப் பற்றியவர்கள்-உபாசிப்பவர்கள் வழிபடுபவர்கள் பாவங்களைப் பற்றியேசுழன்று வருந்துவர். அப்பரடிகள், பற்றி நின்ற பாவங்கள் பற்றவேண்டில் -உனையல்லால் ஒருதெய்வம் உள்கேன்-என்று போற்றுமாறு ஆரூர்ப் பெருமானிடம் ஆற்றுப் படுத்துவார்.

பாவம் என்பது வடசொல் என்பர். தமிழின் வளர்ந்த நிலையில் ஏற்ற தமிழ்ச்சொல் இது வரையில் காணவில்லை. நல்லது-தியது- (அல்லது) என்ற எதிர் மறைச் சொற்கள் பண்டு பாவத்தை உணர்த்தின. திருவள்ளுவர் 'அழுக்காறெ‌ன ஒருபாவி' என்றார். பாவி என்ற சொல் பால் பகா-பொதுப் பெயர். திருவள்ளுவர் பயன் படுத்திய வடசொற்களில் பாவியும் ஒன்று.

பாவம் என்பது பாவித்தல் என்ற பொருளுடையது. இதனைச் சுந்தரர்.

'பாவகம் இன்றி மெய்யே பற்றுமவர்க்கமுதை' என்று பொருள்காட்டுவர். பாவித்தலையே வாழ்வாக நடத்துபவர் பாவிகள். பாவித்தல் மெய்நிலை ஏறஒருபடி. அப்பாவித்தலும் இல்லாதவர்கள் அப்பாவிகள்! இரண்டுங் கெட்டான்! திரிசங்கு சொர்க்க நிலையினர்.

பாவம் பிறவிக்கு ஏதுவாக அமைவது. உயிர்கள் பாவம் தவிரப் பழகிடல் வேண்டும். அப்பழக்கம் திருவருள் நப்பும் ஞானியர் கூட்டுறவால் வரும். ஞானியர் துணையோடு திருவருள் உறைப்போடு வாழத் தொடங்கு பவர்க்கு பாவம் பற்றாது.

மனதால் முதல்வன் திருப் பாதமேபற்றி வாழ்ந்தால்-பாவம்

நம்மைப்பற்ருது. இறைவனைப் பற்ருத மனம் தூய்மையுடைய தன்று. அது பாவம் பற்றிய மன மேயாகும். ஆகவே திருஞானசம் பந்தர் தில்லைக் கூத்தப் பெரு மானை நினைவு கூர்கின்ற போது சிற்றம் பலப் பெருமானை அடைந் தவர் சிறப்புடன் வாழ்வது போல -முதல்வன் பாதமே பற்றியவர் பாவத்தில் பற்ருது வாழ்ந்து சிறப்படைவர்.

பாவம் நீங்க வழி ஏது? இதோ நமது திருஞானசம்பந்தர் பெரு மான் திருமுறை அழகாக ஓவியம் தீட்டிக்காட்டுகிறது.

தில்லைச் சிதம்பரநாதன் பாதத் . தையே பற்றுங்கள்-
பாவம் உங்களைப் பற்ருது-

என்று வண்ணத் தமிழில் தமது எண்ணங்களை வெளியிடுகின்ருர் ஆளுடைய பிள்ளையார்: அப்பாடல்:

கற்ருங் கெரி யோம்பிக் கலியை
வாராமே
செற்ருர் வாழ்தில்லைச் சிற்றம்
பலம் மேய
முற்ரு வெண் திங்கள் முதல்வன்
பாதமே
பற்ரு நின்ருரைப் பற்ரு
பாவமே.

# போரூர்த் தனிமுதல்

பொ. முத்தரசு, எம். ஏ. பிடி

முருகன் எனத் தமிழ் மூதறிஞர் முழுமுதல் இறைவனை அழைத்துப் போற்றினர். அவன் ''மணப் கமழ் தெய்வத்து இளநலம்'' வாய்ந்தவன் அவன் பெருமை அனைத்தும் உயிர்களின் அறிவுக்கு எட்டுவன அல்ல. அவை பேசப் பேசப் பெரிதும் நீளும். ஆயினும் அவன் உள்நின்று உணர்த்தி உதவ அடியவர் பெருமக்கள், தாம் பெற்ற இன்பத்தை நாமும பெற்று உய்ய அமுதத் தமிழ்ப் பாக்களால் வடித்து வழங்கியுள்ளனர்.

வாழையடி வாழையெனத் தோன்றிய இத்திருக்கூட்டத்தில் தனிச்சிறப்புப் பெற்று விளங்குபவருள் தவத்திரு சிதம்பர அடிகளார் ஒருவர் ஆவர். இவர் இற்றைக்கு முன்னூறு ஆண்டுகட்கு முன்பு மதுரை மாநகரத்தில் தோன்றியவர். அங்கயற்கண்ணி அம்மையின் அருள் பெற்றவர். தமிழும் வடமொழியும் முழுதுணர்ந்த சான்றோர். கவிநலமும் பெற்ற சிறப்பினுல் சிதம்பரக் கவிராயர் எனப் புகழ் எய்தி விளங்கினர். திருமுது குன்றத்தில் திகழ்ந்த குமாரதேவர் என்பவரை ஞானசிரியராக அடுத்துச் சிறந்தார். திருப்பேர்ருச் சாந்தலிங்க அடிகளாரின் கட்டளைக் கிணங்க அவரியற்றிய 'அவிரோத உந்தியார்' முதவிய நான்கு நூல்களுக்கும் கண்ணுடைய வள்ளலார் இயற்றிய ''ஒழிவில் ஒடுக்கம்'' என்னும் நூலுக்கும் மிகச்சிறந்ததோர் விரிவுரை அருளிச் செய்தார். முருகபெருமான் திருக்குறிப்பின் படியும், தம் ஞானசிரியரின் ஏவற்படியும் திருப்போரூரில் மறைந்திருந்த திருக்கோவிலைப் புதுக்கித் திருப்பணி செய்து அருட்பேரொளியுடன் இலங்கச் செய்தார்.

திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகபெருமானைப் போற்றி உளங் குழைந்து இவர் பாடியுள்ள பாடல்களின் தொகுப்பே, இப்போது ''திருப்போரூர்ச் சந்நிதி முறை'' என்று வழங்குகிறது ''குன்று தோருடிய குமரன்'' ஆதலின் முருகன் பெரிதும் மலைத் தலைகளிலேயே கோயில் கொண்டு வீற்றிருப்பான். அவன் தென் தமிழ் நாட்டில் திருச்செந்தூரில் கடற்கரையில் கோயில் கொண்டிருப்பது போல, வடதமிழ் நாட்டில் திருப்போரூரில் கடற்கரையில் வீற்றிருந்தருள் செய்கின்ருன். இவ்விருதலங்களும்

அவுணரை அழிக்க அவன் எழுந்தருளிய இடங்களே.

திருச்செந்தூர், குமரகுருபர அடிகளாரது கந்தர் கலிவெண்பாவினால் சிறப்புற்று விளங்கியது போலத் திருப்போரூரும் சிதம்பர அடிகளாரது பாக்களாலும் அவர் முன்னின்று செய்த திருப்பணிச் சிறப்பினாலும் பொலிவு பெற்று விளங்குகிறது. மேலும் அகத்திய முனிவர் வழிபட்டுப்பேறு பெற்ற திருத்தலமாகவும் இது திகழ்கிறது.

திருப்போரூர் முருகப் பெருமான் மீது பாடியுள்ள சிதம்பர அடிகளார் பாடல்கள் பல்வகைச் சுவை நலங்களும் நிரம்பியன. அவைகளுள் சில நெஞ்சறிவுறுத்துவனவாக உள்ளன; சில அருளின் திறத்தை விளக்குவன; சில உலகத்தாருக்கு உறுதிப் பொருள்களை உணர்த்துவன; சில குருநாதனிடம் குறையிரந்து வேண்டுவன; சில மெய்ப்பொருள் நலங்களையும், தத்துவ உண்மைகளையும் இனிய எளிய முறையில் விளக்குவன. இன்னோரன்னவும், வேறு பலவும் இவர் பாடல்களில் பொதிந்துள்ளன. அவற்றைச் சிறிது சிறிதாக உணர்ந்து பயன்பெறுவது நலம்பயக்கும்.

திருப்போரூரில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான் யாவருக்கும் நலம் புரிபவன்; என்றும் யார்க்கும் தீது புரியாதவன்; தீயனவே செய்த சூரனுக்கும் பேரருள் செய்தவன். உயிர்கள் பிழைபுரியும்; ஆயினும் அவற்றைத் தக்கவாறு திருத்தி உய்யுநெறி காட்டுபவன் அவனே. எனவே, நம் அடிகளார் அவனைப் போற்றும்போது கூறுவது வருமாறு:

ஏதுபிழை செய்தாலும் ஏழை
யேனுக் கிரங்கித்
தீது புரியாத தெய்வமே-நீதி
தழைக்கின்ற போரூர்த் தனி
முதலே நாயேன்
பிழைக்கின்ற வாறுநீ பேசு.

பிழைப்பது என்பது நாம் இவ்வுலகில் உயிரோடு வாழ்ந்திருப்பது அன்று. கணிக்க முடியாத காலந் தொட்டு வருகின்ற பிறவிக்கடலில் வீழ்ந்து தவியாமல் தப்பித் திருவருளாகிய கரையேறுவதையே அது குறிக்கின்றது. கடலினின்றும் கரையேறப் புணையொன்றுவேண்டும். மணிவாசகர் அதனை அஞ்செழுத்தின் புணை என்பர். அதுகண்டு முருகப்பெருமான் திருப்பெயரே ஆகும். ஒருநாமம், ஓர் உருவம், ஒன்றும் இல்லாத அவனுக்கு ஆயிரம் திருநாமம் உண்டு. அவற்றுள் ஒன்று போரூரன் என்பது. அதனைச்சொல்லிச் சொல்லி ஈடேறலாம்.

இல்லறத்தான் அல்லேன் இயற்
கைத் துறவியல்லேன்
நல்லறத்து ஞானியல்லேன்
நாயினேன்-சொல்லறத்தின்
ஒன்றேனும் இல்லேன்
உயர்ந்த திருப்போரூரா
என்றே நான் ஈடேறுவேன்.

அறநெறிகளுள் ஒன்றும் கடைப்பிடியாத நான் என்று பிழைத்து ஈடேறமுடியும் என்று கேட்ட அடிகளார், நாமுய்வதற்காக, அதனையே மறித்துத் ''திருப்போரூரா, திருப்போரூரா'' என்று அவன் திருப்பெயர் ஒன்றுமே மீட்டும் மீட்டும், சொல்லி ஈடேறுவது உறுதி என்று இயம்புவது காண்க.

# இருபா இருபஃது

தெளிவுரை :

ரு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்

சொல் தொழுப்பு-சிறப்பித்துச் சொல்லப்படும் அடிமை. 'அடிமை சாள அழகுடைத்தே' எனவடும் திருவாக்கும் காண்க. யாங்குஐய-இவ்வாறு இருத்தற்குக் காரணம் யாது ஐயனே! மதுக் குளித்த கொன்றை எனமாறுக.

18. கோலங் கொண்ட வாறுண ராதே
ஞாலங் காவலன் யானெனக் கொளீஇப்
பொய்யை மெய்யெனப் புகன்று வைத்து
ஓடாப் பூட்கை நாடி நாட
என்னுட் கரந்து என்பின் வந்தருளி
என்னையும் தன்னையும் அறிவின்று இயற்றும்
என்னது யான் எனும் அகந்தையும் கண்டு
யாவர் யாவையும் யாங்கணும் சென்று
புக்குழிப் புக்குப் பெயர்த்துழிப் பெயர்த்தும்
மிக்க போகம் விதியால் விளைத்திட்டு
எற்பணி யாளா எனைப் பிரியாதே
ஓடி மீள்கென ஆடல் பார்த்திட்டு
என்வழி நின்றனன் எந்தை யன்றே
அருண்மிகு வுடைமையின் அருட்டுறை வந்து
பொருண்மிக அருள்தலும் பொய்ப்பகை யாதலும்
கைகண்டு கொள்ளெனக் கடலுலகு அறிய
மெய்கண்ட தேவன் எனப்பெயர் இரீஇத்
தன்னுட் கரந்து தான் முன்னாகித்
தன்னதும் தானுமாய் என்னையின் றாக்கித்
தன்னையும் என்னையும் தந்து தனது
செய்யா மையும் என்செயல் இன்மையும்
எம்மான் காட்டி எய்தல்
அம்மா எனக்கே அதிசயம் தருமே.

(தெ-ரை) துன்பத்திற்கு ஏதுவாய உடல் எடுத்தமைக்கு வருந்தல்செய்யாது இந்நிலவுலகிற்கு நானே அரசன் எனக்கருதிக் கொண்டு நிலையற்ற உடல் உலகு முதலியவற்றை நிலையுடையன எனக் கூறிக்கொண்டு உலகியற் சூழலில் உழலுவதையே கடன் எனக்கருதி அதற்கேற்ப விருப்பத்தைச் செய்து தன்னை நாடாத என்னுள் புகுந்து மறைந்து நின்று என் செயலுக்கெல்லாம் பின் நின்றருளி யான் அடிமையென்றும் தான் தலைவனென்றும் அறியாதவாறு செய்யும் யான் எனதென்னும் செருக்கையும் கண்டு திணைவேறுபாடு இன்றிப் பல பிறப்புக்களிலும் மண்ணும், விண்ணும், நரகமும் ஆய உலகங்களில் என்

னேடு ஒத்துச்சென்று வினைக்கு விளைவாக யான் பிறக்கும் இடங்களி லும் ஒக்கப்புகுந்து நான் அவ்விடத்தை விட்டுழித்தானும் விடுத்து, துய்த்தற்குரிய இன்ப துன்பங்களை வினைவழி உளவாக்கி அவற்றை நுகரவும் செய்து இவ்விடத்து எனக்குப் பணியாளனுமாய் நின்று என்னிடத்துப் பிரிவின்றியைந்து போக்கும் வரவும் புணர்வுமில்லாத எனது நாடகச் செயலையும் பார்த்துத் தன் முதன்மையையும் விடுத்து என் வழி நின்றனன் என் தந்தையாய இறைவன். இது பெரிதும் வியத்தற்குரியது. அதனேடும் அமையாது தன் அருள்மேலீட்டால் திருவெண்ணெய்நல்லூரின்கண் உள்ள திருவருள் துறையில் எழுந் தருளி பேரின்பப் பொருளே துய்த்தற்குரியதென அருளிச் செய்தும் காணப்படும் பொருள்யாவும் நிலையற்றன, அவை பகையுடையன என்பதனையும் அருளி தன்னைக்கண்டு கொள்க எனக்காட்டியருளி கடல் சூழ்ந்த இவ்வுலகு அறிய மெய்கண்டதேவன் என்னும் திருப் பெயரையும் கொண்டு தன்னுடைய பேரறிவின்கண் என்னுடைய சிற்றறிவை அடக்கிக்கொண்டு தன் செயலே மீதூர்வதாக தன் அரு ளும் தானுமாய் நின்று என்னைத் தன்னகத்தடக்கித் தானெரு முதல் வன் என்பதையும் யானெரு அடிமை என்பதையும் விளங்கச் செய்து தான் எவற்றிலும் தோய்ந்திருந்தும் தோய்வுருது நிற்பதையும், யான் எவற்றையும் செய்திருந்தும் எனது செயல் இன்மையையும் என் னுடைய தலைவன் எனக்குக் காட்டி ஆட்கொண்டருளியது மிகவும் பாராட்டுதற்குரிய தாகும். வியத்தற்குரியதுமாகும் என்பதாம்.

இறைவன் உயிர்க்குச்செய்தருளும் பேருதவியை நீளநினைந்தருளுவது இத்திருப்பாடலாகும். இதற்குமுன்னுள்ள பாடல்களில் பல அரிய பொருள்களை வினவியும் விடுத்தும் அருளிய ஆசிரியர், இத்திருப் பாடல் முதல் மூன்று பாடல்களிலும் தம் குருமூர்த்தியைப் போற்று மாறே அருளியுள்ளார்.

பூட்கை - மேற்கோள், அம்மா - வியத்தற் பொருண்மைக்கண் வந்தது.

19 தடுமா தருமத் தலைநின்று ஆழ்வேனைக்
கருமா கடல் விடம் உண்கண்டப் — பெருமான்
திருவெண்ணெய் நல்லூர்ச் சுவேத வனத்தான்
உருவென்ன வந்தெடுத்தான் உற்று.

தெ-ரை) நல்வினை தீவினையென்னும் பெருங்கடலில் கிடந்துஅழுந்துகிற என்னைக் கருமையும் பெருமையும் உடைய கடலின் கண் தோன்றிய

நஞ்சினைக் கழுத்தில் அடக்கிய இறைவனே, திருவெண்ணெய்நல்லூரின்கண் சுவேதவனப் பெருமான் என்னும் திருப்பெயரினையுடையவனாய் என்னைப் போன்றதொரு வடிவுகொண்டு எழுந்தருளி பிறவிக் கடலினின்றும் எடுத்துத் தன் திருவடியில் ஆட்கொண்டனன் என்பதாம்.

தருமம் அதருமம் என்பன புணர்ச்சிவிதியால் தருமா தருமம் என நின்றது. தலை-இடம். அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டப்பட்டது பிறவியாகும். அவ்வினைப்பிறவி எல்லையற்றது என்பார் பெருங்கடல் என்றார். உருவென்ன எனவே அவ்வுரு வினைவயத்ததுபோல்வதன்று என்பது விளங்கும்.

20. உற்றவர் பெற்றவர் அற்றவர் முற்றும்
அற்றவர்க்கு அற்றவன் அல்லவர்க்கு அல்லவன்
அந்த மாதி யில்லவன் வந்து
குரக்கு மனத்துக் கொடியேன் பரக்கும்
பரப்பைச் குவித்து நிறுத்திப் பிடித்திட்டு
இருள் வெளியாகும் அருளினை யறுத்து
வந்து புகுதலும் சென்று நீங்கலும்
இன்றி யொன்றாய் நின்ற அந்நிலையில்
ஒன்றா காமல் இரண்டா காமல்
ஒன்றும் இரண்டும் இன்றா காமல்
தன்னது பெருமை தாக்கா தாயினும்
என்னது பெருமை யெல்லா மெய்தித்
தன்னை யெனக்குத் தருவதை யன்றியும்
என்னையும் எனக்கே தந்து தன்னது
பேரா னந்தப் பெருங்கட லதனுள்
ஆரா வின்ப மளித்துத் தீரா
உள்ளும் புறமும் ஒழிவின்றி நின்ற
வள்ளமை காட்டி மலரடி யருளிய
மன்னன் எங்கோன் வார்புனற் பெண்ணை
வெண்ணெய்க் காவலன் மெய்கண்ட தேவன்
அண்ணல் அருளா லயத்தான் நண்ணி
மலமுத லாயின மாய்க்கும்
உலக வுயிர்க் கெல்லாம் ஒருகண்ணே.

தெ-ரை) உற்றார், பெற்றார், மனைவி மற்றும் அனைத்துப்பொருள்களிலும் உள்ள பற்றை விட்டார்க்குப் பிரிவின்றி இயைந்திருப்பன் அத்தகைய பற்றுக்களினின்றும் நீங்காதவர்க்கு வேறாய் நிற்பன். தனக்கொரு முதலும் முடிவும் இல்லாதான். இத்தகையோன் குருவாக எழுந்தருளி வந்து குரங்கு மனம் போல ஒன்றிலும் பற்றாத கொடிய என்னை இவ்வுலகியல் சூழலின்றும் ஒடுக்குவித்துத் தன அருளிலே நிறுத்தி உலகியல் துன்பங்களில் மீண்டும் உழலாதவாறு தன்னிலே

(கேவல நிலை), கூட்டுநிலை (சகலநிலை) ஆகிய இரண்டிலும் மயங்கும் மயக்கத்தை நீக்கித்தான் வருதலும் யான் சென்று கூடுதலும் என்னும் நிலைமையின்றித் தானும், யானும் பிரிவின்றியைந்திருக்கும் நிலையில் ஒன்றென்றும், இரண்டென்றும், ஒன்றும் இரண்டும் இன்றென்றும் கூற இயலாதவாறு, தனது பெருநிலையையும், ஐந்தொழில் செய்தலையும் எனக்கு உண்டாக்காது ஒழியினும் என் அறிவு, இச்சை, செயல் ஆகிய மூன்றையும் தனது நிறைவில் அடக்கிக் கொண்டு தனது இன்ப வடிவை எனக்குக் காட்டி அருளுவதன்றி என்னிலை எது என்பதையும் எனக்கு அறிவித்தருளி, தனது பேரானந்தப் பெருங்கடலில் அமையாது மேன்மேலும் துய்க்குமாறு செய்து என்னிடத்தில் நீங்காது அகத்தும் புறத்தும் ஒழிவின்றி நின்று தனது அருட்கொடையைத்தன் திருவருளால் காட்டியருளிய அருட் காவலன்; எனது தலைவன்: மேன்மேலும் பெருகி வரும் நீர் நிறைந்த பெண்ணையாறு சூழ்ந்த திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருக்கும் தலைவன் மெய்கண்டதேவன் என்னும் திருப்பெயரை உடையவன்: மேலானவன். அருளையே கோவிலாகக் கொண்டு எழுந்தருளியிருப்பவன். அத்தகையோனே என்னிடத்து வந்து மும்மலங்களையும் மாய்த்தனன். அவனே அனைத்துலகிலுமுள்ள உயிர்கட்கெல்லாம் ஒப்பற்றதொரு அறிவாக விளங்குபவன என்பதாம்.

உற்றவர் - உறவின் முறையாயோர். பெற்றவர் - தாய் தந்தையர் அற்றவர் - தன்னிடத்து வேற்றுமையின்றி நெஞ்சொத்து இருப்பவர்; மனைவி. அற்றவருக்கு - உலகியல் பற்று அற்றவர்க்கு; அற்றவன் - பிரிவு அற்றவன்; எனவே இயைந்திருப்பவன். 'உலகினில் இயற்கையை ஒழித்திட்டு, அற்றவர்க்கு அற்ற சிவன் உறைகின்ற ஆலவாயாவதுமிதுவே' எனவரும் திருவாக்கு காண்க.

மன அலைவிற்குக் குரங்கு மனத்தைக் காட்டுதல் இயல்பு. பரக்கும் பரப்பு—உலகியல் பொருள்களில் மேன்மேலும் அவாவுற்றுச் செல்லுதலும், கிட்டியவழி மகிழ்வும், கிட்டாதவழிச் சினமும் கொண்டு அலையும்நிலை 'பரபரக்க வேண்டாம் பலகாலும் சொன்னேன' எனவரும் திருவாக்கும் காண்க. இருள், வெளியாகும் மருள்—உயிர் தனிநிலை (கேவலம்), கட்டுநிலை (சகலம்) ஆகிய இருநிலைகளிலும் ஏற்கும் மயக்கம். இறைவனொடு உயிர் பிரிவின்றி இயைந்திருப்பினும் இறைவன இறைவனே: உயிர் உயிரேயாகும். ஆதலின் ஒன்றாகாமல் என்றார் இரண்டாக நிற்பினும், கட்டு (சகல) நிலையில் தானேயாகவும், வீட்டுநிலையில் அவனேயாகவும் இருத்தலின இரண்டாகாமல் என்றார், வீட்டு நிலையில் இறைவனிடத்துப் பேரானந்தப் பெருவாழ்வில் திளைக்குங்கால் அவனொடு ஒன்றி நிற்றலின் ஒன்றும் இரண்டும் ஆகாமல் என்றார், தன்னது - தன்னுடைய

# பருவதவர்த்தினியம்மன் பேரிலாசிரியம்

1. துறைகொண்டு தமிழ்கொண்டு துதிகொண்டுநின்பதி
தொழுதுகொண் டடிமையென்றுஞ்
சுனைகொண்டு கோவிலை வலங்கொண்டு யான்பட்ட
தொல்லை சொல்லிக் கொண்டுமென்
குறைகொண்டு முறைகொண் டடங்காத கண்ணினீர்க்
குதிகொண்டு பாயவிம்மி
கொண்டுமன நொந்துகொண் டுன்னைவேண்டிக்கொண்டு
கும்பிட்டு வந்துநின்றால்.
நிறைகொண்டு மறுவையுங் கைக்கொண்டு சொன்னசொல்
நிலவரங் கண்டுகொண்டு
நேசமுங் கண்டுநமை நம்பினவ னென்றுள்ள
நினைவுகொண் டாட்கொள்ளுவாய்,
மறைகொண்ட பாதமலர் யான்கொண்டு பணியவும்
வளங்கொண்ட தேவைநகர்வாழ்
மருமலர்த் துன்னுகுழ லனநடைக் கன்னியெனு
மலைவளர்ப் பெண்ணமுதமே.

2. பொய்ப்பிள்ளை சிறுபிள்ளை நெறியினில் லாப்பிள்ளை
பொல்லாத பிள்ளைநினையே,
போற்றறி வறும்பிள்ளை வாய்த்தமிழி லாப்பிள்ளை
புகழ்வள ரிலாப்பிள்ளையாம்
மெய்ப்பினில் லாப்பிள்ளை மெத்தவே ழைப்பிள்ளை
வீண்பிள்ளை யென்றெண்ணுவர்,
விட்டுவிட வெண்ணார்கள் பிள்ளைக ளன்னைக்கு
வேண்டாத பிள்ளையுண்டா
தைப்பிள்ளை மதிதரு சடைப்பிள்ளை வெயில்பிள்ளை
சதுமறைப் பிள்ளைசங்கு
சக்கிரா ரிபிள்ளை காணாத ராமீசர்தன்பங்கில்
விளையா டுமோர்
மைப்பிள்ளை பச்சைப் பசுங்கிளிப் பிள்ளைதேவையி
லெழுந்தபெண் பிள்ளையெனவோர்
மருமலர்த் துன்னுகுழ லனநடைக் கன்னியெனும்
மலைவளர்ப் பெண்ணமுதமே.

3. அளகச் சொடுக்கிலே யிதழா முடுக்கிலே
யஞ்சனக் கூர்விழியிலே
யமிர்தமுறு மதிநுதற் றிலதத்தி லேமுல்லை
யரும்பெனுந் தந்தத்திலே,
புளகப் பொருப்பிலே களபத் திருப்பிலே
பொற்கலை யணியிடையிலே,
பொங்குமல் குற்றடந் தன்னிலே துடையிலே
பொருந்துநூ புரவடியிலே,
அளவற்ற காதலி லழுந்திக் கிடக்குமென்
னுவியைப் புனிதமாக்கி
அருள்தேக்கி மருள்நீக்கி யருள்தரு வெளியாக்கி
யாட்கொண்டு கதியுதவுவாய்
வளமொத் துலாவிவளர் நிலவுமலர்க் கோராரம்
ஆதிதே வைக்குளொளிவாம்
மருமலர்த் துன்னுகுழ லனநடைக் கன்னியெனு
மலைவளர்ப் பெண்ணமுதமே.

4. பொல்லாத புலையனும் கல்லாத மூடனும்
பொருள்கள்தே டாதழிக்கும்
பொய்யன் குறும்பனும் செய்பயன் நற்கணப்
பொழுதிலழிமேவி வளரும்
வில்லாமல் விற்கின்ற பொதுமடக் கன்னியர்கள்
விரககச் சைக்கடையிலே
வியாபார முஞ்செய்து லாபமில் லாமலே
வெகுநட்டப் பட்டுழல்வதோ
கல்லார பாரமா முத்தர கேயூரில் நலங்கஅருள்
தருசங்கரிசெகத் பரிபாலகி
அரிசெனச் சியர்திரி புரராச்சிய சோதி சுபரி
பல்லாழி தடஞ்சூழும் சக்கிரா யுதக்கட வுள்
மால்தங்கை கருணைபுசழ்வாய்
மருமலர்த் துன்னு குழலன நடைக்கன்னியெனு
மலைவளர்ப் பெண்ணமுதமே.

5. விடென்று மனையென்றும் பிள்ளையென் றளவிலா
வெறுக்கையென் னுடையென்றும்,
மெய்க்கிடும் பணியென்றும் கைக்குமோ திரமென்று
மின்னலழி மமுத மென்றும்
மாடென்றும் நிலமென்றும் பயிரென்றுங் குடியென்றும்
வாய்த்ததென் றதுவுமின்றி

மன்னு பெருநாடென்று மின்னலழி பொருளென்றும்
வாடு மிருமெனகூறி
பாடொன் றெழித்திலென் னுல்வந்த வினையொழிய
பகர்தலடு ளாரடுளுவார்
பாருலகில் வீணன பத்தென்று விட்டுவுன்
பாததாமரை பணிகுவேன்
மாடங்க ளடுள்சித்திர கூடங்கள் நிறைவீதி
ஆதிதே வைக்குளொளிவா
மருமலர்த் துன்னுகுழ லனநடைக் கன்னியெனு
மலைவளர்ப் பெண்ணமுதமே.

6. அஞ்செழுத் தோதிசிவ கெங்கையின் மூழ்கிநின்
னலையஞ் சூழவந்து
அரனரி யயன்பரவு நினதுபத கமலங்க
ளடியேனஞ்சலி செய்வதா
மிஞ்சுகுண மாகவே சாசுவித மாகியே
மேலான ஆதாரமா
மீதாய் விளங்குபெரு வெளியூ டிருக்குநின்
மெய்ம்மலர்ப் பதமருளுவாய்
கொஞ்சுமஞ் சுகபாணி சறுவீத பாஷணி
குணமருள்துதி கல்யாணி
குவளைமல ரணிவேணி யேதிரி புராரி
குலவுமா கமபுராணி
மஞ்சுகண் டெழுமயில்க ளாடிநிறை சூழ்கந்த
மாதனம் வளர்குமாரி
மருமலர்த் துன்னுகுழ லனநடைக் கன்னியெனு
மலைவளர்ப் பெண்ணமுதமே.

7. தருவைநிகர் கன்ன னென்றுபள கேசனென்றுமித்
தரணிமுழுதாளி யென்றும்
தயவிலார் பாற்சென்று தமிழுரைப் பேனென்றுந்
தடுமாறி நின்றளவிலா
பருவமுது நாளெல்லாம் வீணிலே போக்கின்ற
பாதகனை மதிக்கார்
பாரினில் விரகமுறு வாடுன்னை யல்லாது
பற்றுமற் றொருடு வருண்டோ
சொரூபவடி வேமறைகள் சொல்லுமுடி வேவேத
சூட்சமதியான நடுவே,
தோன்றிநின் றழியாத மெய்ஞ்ஞானத் தீபச்சுடர்க்
கொழுந்தே யழிவிலார்

மடுவுசடி லப்பவுத மேனியே ராமீசர்
வாமபா கத்துளொளிவே
மடுமலர்த் துன்னுகுழ லனநடைக் கன்னியெனு
மலைவளர்ப் பெண்ணமுதமே.

8. மாலுமய னும்பரவு நின்மலர்ப் பாதத்தில்
மலர்தூவி யேவணங்கி
மங்குநீர் விழியினு லர்ச்சித்தும் நாவால்
வழுத்தியே துதிசெப்புவோர்
சிலமுறு மட்டாங்க யோகமும் ஞானமும்
சிந்தித மனேசித்தியும்
செப்புதற் கரியதோர் மேன்மையு மின்னமவர்
சிந்தையில் நினைத்ததெல்லாம்
பாலலோ சனியுன தருள்புரிக வேவரும்
பாரிதற் கையமுண்டோ
படுவத வர்த்தனி ராமீசர் பங்கில்வளர்
பாலலோசன கல்யாணி
மாலான ராமலெட் சுமணசி தைஅனு
மன்முதல்யாவடும் வணங்குசீலி
மடுமலர்த் துன்னுகுழ லனநடைக் கன்னியெனு
மலைவளர்ப் பெண்ணமுதமே.

9. துங்கமிகு ஆதித்த வாரமணி கொங்கையும்
சோம வாரத்தி னுதலும்
துய்யசெவ் வாயு மெழிற்பசிய புதன்மேனி
யுய்சொல்வி யாழச் சுடகம்
தங்குமிடு செங்கையும் சுக்கிர வாரத்தை
நிகர்சடிலற் கண்டுள மகிழ்தலாற்
றற்சனியை மூக்கின்வைத் துன்வடிவு கொண்டிட
தவமுயல்வர் அமரர்மாதர்
கங்குல்நிகர் மயிடேச சங்காரி யுக்கிர
காளிஅர விந்தவிரி
கவுமாரி அவுதாரி புகழ்வாரி செகநாரி
கனகவரை வளர்குமாரி
வங்குநிறை வாவிபுகழ் செங்கமல வாவிசூழ்
வளர்தேவை நகரின்வாழ்வே
மடுமலர்த் துன்னுகுழ லனநடைக் கன்னியெனு
மலைவளர்ப் பெண்ணமுதமே.

# திருவிளையாடற் புராணம்

உரை நடை

## கௌரி அன்புடன் கிழவேதியர்க்கு அமுது படைத்தல்

அதுகண்டு கௌரி மிக்க அன்போடு எழுந்து அவ் விருத்த வேதியரை எதிர்கொண்டு அழைத்து ஆசனத்தில் அமர்த்திக் கைகூப்பி வணங்கி நின்று, ''எப்பெருமானே! தங்களை இங்குத் தரிசிக்கத் தமியேன் என்ன மாதவம் செய்தேனோ!'' என்று முகமன் கூறினாள். விருத்த வேதியர், ''நாம் பசியுற்று உன்னிடத்தில் வந்தோம்'' என்றார். அதற்குக் கௌரி, ''அந்தோ! எம்மவர்கள் வீட்டைப் பூட்டிக்கொண்டு போய்விட்டார்களே'' என்று மனஞ்சசிந்தாள். சிவபெருமானாகிய வேதியர் கௌரியை நோக்கி, ''நீ உன் கையாலே பூட்டைத் தொடு; கை பூட்டில் படுமுன்னரே பூட்டுத் திறந்துவிடும்; நீ கதவைத் திறந்து விரைவில் சமைக்கக் கடவாய்'' என்றார். இறைவியின் திருவடியில் அன்பு செலுத்தும் கௌரி, அங்ஙனமே செய்து மடைப்பள்ளியினுள்ளே புகுந்து திருவமுது சமைத்துப் புறத்தே விருத்த வேதியரிடம் வந்து கையில் கமண்டல நீரை ஏந்தி, ''ஐயனே! திருவமுது செய்ய எழுந்தருளுவீராக'' என்று வேண்டினாள். அங்ஙனமே எழுந்த பெரியாரின் திருவடியாகிய செந்தாமரை மலர்களைப் பெரிய தவக் கொழுந்தாகிய கௌரி கமண்டல நீரால் விளக்கி, அந் நீரைத் தன் சிரசின்மீது தெளித்துக்கொண்டு அவரை உள்ளே அழைத்துச் சென்று ஆசனத்தின் மீது இருத்தி நறுமலர்களால் அருச்சித்தாள்; பின்பு நல்ல உண்கலத்தைத் திருத்திவைத்து, முல்லை அரும்பு போன்ற பால்வார்த்துச் சமைத்த திருவமுதை வெள்ளி மலை போலவும், பருப்பினை அம்மலையின் பொன்முடி போலவும், பலவேறு பொரிக் கறிகளை அம்மலையின் புறத்தில் சூழ்ந்து கிடந்த சிறு மலைகளின் கூட்டம் போலவும், நெய்யினை அம்மலையில் ஓடிவரும் அருவி போலவும் படைத்தாள்; வேறு வேறு சிற்றுண்டிகளையும் அவ்வாறே படைத்தாள்; சிவந்த வாயானது இடை இடையே இனிய மொழிகளாகிய அமுதினைச் செவியில் உண்பிக்கவும், கையானது அறுசுவையோடுங் கூடிய அமுதினை வாயில் உண்பிக்கவும், மூப்புக்காரணமாகத் தளர்ச்சியுற்ற திருமேனியினையுடைய அவ்வேதியர் உண்டருளினர்.

அப்போது அக்கிழ வேதியர் தேவாமுதம் உண்டவர்போல மூப்பு நீங்கப்பெற்று மன்மதனை வென்ற கட்டழகு பெற்றவராய்க் கௌரி பார்க்குமாறு இருந்தார். அச்சமயம் அவர் திருமேனியில் அணிந்த திருவெண்ணீறு மாறிக் கலவைச் சந்தனமாகியது; உருத்திராட்சங்கள் மாறிப் பசும் பொன்னாற் செய்த குண்டலங்களும் கடகங்களுமாக

விளங்கின; முதுமை மாறிக் காளைப் பருவத்தினராய்த் திகழ்ந்தார். கற்பிற் சிறந்த கௌரி அது கண்டு நடுநடுங்கி வளைக்கரங்களை நெரித்தாள்; மனந் திகைத்து உடல் வியர்த்து அஞ்சி ஒரு புறம் ஒதுங்கி நின்றாள்.

குமரர் குழவியாக மாறுதல்

அப்பொழுது திருமணத்தின் பொருட்டு அயலூருக்குச் சென்றிருந்த மாமி முதலியோர் திரும்பிவந்து வீட்டிற்புகப் பதினாறு வயதுடன் திகழ்ந்த இறைவராகிய அந்தணர் உடனே நெற்றியில் விபூதி அணிந்த ஒரு பசுங் குழவியின் வடிவத்தைக் கொண்டருளினார்.[1] எழுதுதற்கரிய வேதமாகிய சிலம்புகள் புறத்தே சூழ்ந்து கிடந்து ஒலிக்க—அன்பர்களின் இதயமாகிய செழுமலர் ஒடையில் மலர்ந்து, சிவானந்தமாகிய தேன் ததும்பி வழியும் தாமரை மலர் போன்ற சிறிய திருவடியின் பெருவிரலை வாயில் வைத்துச் சுவைத்து, மைதீட்டிய கண்களில் நீர் ததும்ப வாயைத் திறந்து அழுதுகொண்டு உலகத்து உயிர்களை யெல்லாம் படைத்துக் காத்து அழித்தருளும் ஐயன் அணையாக விரித்த ஆடையின் மீது கிடந்தருளினார்.

''எழுதரிய மறைச்சிலம்பு கிடந்துபுறத்(து)
அலம்பஅன்பர் இதய மென்னுஞ்
செழுமலரோ டையினமலர்ந்து சிவானந்தத்
தேன்ததும்பு தெய்வக் கஞ்சத்
தொழுதகுசிற் றடிப்பெரிய விரல்சுவைத்து
மைக்கணீர் துளுப்ப வாய்விட்(டு)
அழுதணைஆ டையிற்கிடந்தான்; அனைத்துயிரும்
ஈன்றுகாத்(து) அழிக்கும் அப்பன்.''

மாமியும் கௌரியும்

தாய் கைவிட்டுப்போனதொரு குழந்தையைப் போலக் கலங்கி நான்முகன் ஒருபால் அழவும் - நால்மறைகள் ஒருபால் அழவும் - அன்புடைய கௌரியின் அன்பிலகப்பட்டு வாய்திறந்து அணை ஆடையிற்

---

1. இங்கு, ''பால விருத்தரு மானார் தாமே'' (திருநாவுக்கரசர் தேவாரம்-திருப்பழனம்) எனவும், ''பால, விருத்தனு மானான் கண்டாய்'' (திருநாவுக்கரசர் தேவாரம் – திருமறைக்காடு) எனவும் ''விருத்தராகும் பாலனார் பசுபதியார்'' (திருநாவுக்கரசர் தேவாரம்-திருக்கச்சி மேற்றளி) எனவும் வருவனவற்றைச் சிந்திக்க.

கிடந்து அழுகின்ற குழந்தையைக் கௌரியினுடைய மாமி கண்டு கௌரியை நோக்கி, ''இக்குழந்தை ஏது?'' என்று கேட்டாள். அதற்குச் சிவபெருமானிடம் அன்பு பூண்ட கௌரி, ''[1]தேவதத்தன் என்பவன், தன் மனைவியுடன் இங்குவந்து, 'பெண்ணே! இக்குழந்தையைச் சிறிதுபொழுது பார்த்துக்கொள்வாயாக' என்று வைத்து விட்டுப் போனான்'' என்றாள். இதனைச் சொல்லுமுன்னரே வைணவ நெறியினைக் கைக்கொண்டு, பொறுமை, கருணை, மானம் இவற்றை விட்ட மாமியும், மாமனும் மனங்கலங்கக் கண்கள் சிவப்பக் கோபித்து ''எலும்புகளை அணிந்து சுடுகாட்டிலே சாம்பலைப் பூசி ஆடுகின்ற உருத்திரனுக்கு இடையறாத அன்பு பூண்டவனுடைய குழந்தையின் மேலே அன்புகொண்டவளே! நீயும் எங்களுக்கு ஆகாதவளாயினை'' என்று சொல்லித் துன்பத்தில் ஆழ்ந்து சோருகின்ற கௌரியை, அக்குழந்தையையும் கைக்கொண்டு வீட்டை விட்டுப் போகும்படி துரத்தினார்கள்.

## கௌரிக்கு இறைவன் அருள்புரிதல்

வீட்டிலிருந்து வெளியேறித் தெருவிற்கு வந்த கௌரி திகைத்தாள்; தாயில்லாப் பிள்ளையின் திருமுகத்தை நோக்கி உளம் தளர்ந்தாள்; தனது உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளியிருக்கும் கூடல் நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளை மனத்தினுள்ளே தியானித்துக்கொண்டு உமாதேவியாரின் திருமந்திரத்தை உச்சரித்தாள். என்னே வியப்பு! குழந்தையாய்க் கிடந்து அழுத கொன்றை வேணியர் ஆகாயத்திலே இடபவாகனத்தின்மேல் உமாதேவியோடு காட்சி தந்தருளினார். அக்காட்சியைக் கௌரி தரிசித்துச் சிவானந்தக் கடலில் ஆழ்ந்தாள்.

சிவபெருமான் தமது இடப்பாகத்துள்ள உமாதேவியாரின் திருமந்திரத்தை உச்சரித்துக் கைவந்த அக் கௌரியை உமாதேவியின் வடிவாக்கிப் ([2]சாரூபத்தை அளித்தருளி) பலரும் கண்டு வணங்க, தேவர்கள் மலர்மழை பொழிய, இடபவூர்தியில் ஏற்றிக்கொண்டு ஆகாயமார்க்கமாக எழுந்தருளினார். புவியிலுள்ளோர்கள் அதனைக் கண்டு களிப்புற்று அதிசயித்தார்கள்.

---

1. தேவதத்தன் - இஃது ஓர் அந்தணன் பெயர் என்பர். குறிக்கப்படாத ஒருவனைக் குறிப்பிட்டுக் கூறவேண்டின் 'தேவதத்தன்' என்று கூறுதல் வடநூல் வழக்கமாம்.

2. சாரூபம் - இது சத்தி யுலகத்தின் மூன்றாவது பதவி ஆகும்.

மழுவுருநீத்(து) அடலேற்றின் வடுவார்தம்
இடத்தணங்கின் மனுவை ஓதிப்
பழகியபார்ப் பனமகளைப் பார்ப்பதியின்
வடிவாக்கிப் பலடுங் கண்டு
தொழவிடைமேல் ஏற்றிவிசும் பாருக
மலர்மாரி சுரர்கள் தூற்ற
அழகர்எழுந் தருளினர்; களிதூங்கி
அதிசயித்தார் அவனி மாக்கள்.

செய்யுள் - 33
ஆகச் செய்யுள் - 1460

## 24. கான்மாறி யாடின படலம்

### இராசசேகரன் ஆட்சி

விக்ரம பாண்டியன், தன் ஆட்சியை மகனான இராச சேகரனிடம் அளித்துவிட்டு இந்திரன், பிரமன், திருமால் இவர்கள் உலகத்திற்கு மேலே விளங்கும் சிவலோகத்தை அடைந்தான். இராசசேகர பாண்டியன், சிவபெருமான் ஆனந்தவடிவாய் வெள்ளியம்பலத்தின் கண் நின்று புரிந்தருளும் திருநடனத்தில் வைத்த பேரன்பினால் பரத நூல் ஒன்றொழித்து ஏனைய அறுபத்துமூன்று கலைகளையும் நன்கு கற்று இந்நிலவுலகைப் பொது நீக்கிச் செங்கோல் நடாத்தி மக்களைப் பாது காத்து வந்தான்.

### இராசசேகரன் பரதநூல் கற்க எண்ணுதல்

அக்காலத்தில் சோழநாட்டைக் [1]கரிகாற் பெருவளத்தான் என்னும் சோழ மன்னன் ஆண்டு வந்தான். அவன் காவிரி யாற்றின் வடகரையி லுள்ள திருவானைக்கா என்னும் தலத்தில் சிலந்தி, வாயின் நூலாற் செய்த பந்தரின்கண் திருமால் வணங்க வீற்றிருக்கும் செல்வரிடம் பேரன்பு கொண்டவன்: அறுபத்து நான்கு கலைகளையும் கற்று அறிவில் மேம்பட்டு விளங்குபவன். அக்கரிகாற் சோழனது அரண்மனைப் புலவன் ஒருவன் பாண்டி நாட்டிற்கு வந்து வேப்பமலர் மாலையை

1. இவன், உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னியின் புதல்வன்; தாயத்தாரால் சிறையிலிடப்பட்டு அச்சிறைச்சாலை கொளுத்தப்பட்ட போது அதினின்றும் தாண்டிவந்ததில் கால் தீய்ந்து கரிந்ததால் 'கரிகாலன்' எனப் பெயர் பெற்றவன். காவிரிக்குக் கரையிடுவித்து நீர் நிலைகளைப் பெருக்கித் தன்னாட்டை வளப்படுத்தி 'வளவன்' என வும் அழைக்கப் பெற்றவன். இமயமலையைச் செண்டால் அடித்த வீரன்; பெருங்கொடையாளி.

அணிந்த இராசசேகரனைக் கண்டு முன்னின்று துதிக்கும்போது ''தென்னர் பெருமானே! எம்முடைய கரிகால் பெருவளத்தான் என்னும் அரசனுக்கு அறுபத்து நான்கு கலைகளும் கைவரும்; உனக்கு அவற்றுள் ஒன்று வராது. அது பரதநூல்ஆகும்; ஆதலால் நீ கலைகள் முற்றும் அறிந்திலை'' என்று சொன்னான். அதனைக் கேட்ட பாண்டியன் வேற்றரசன் வாயிற் புலவன் கூறிய வார்த்தை மானத்தையும் பகைமையையும் மிக மூட்டத் துன்பத்துள் அழுந்திய மனத்தனாகி, ''சிவபெருமான் ஆடியருளும் திருநடனத்தைச் சிறியேனாகிய யானும் ஆடுதற்கு என் உள்ளம் விரும்பியதோ? இதுவும் எம்பெருமானுடைய திருவருளேபோலும்'' என்று எண்ணினான்.

இராசசேகரன் பரதநூலைக் கற்றல்

பிறகு இராசசேகரன், பரதநூலை நன்கு கற்றவராய் அந்நூலின் வழியே ஆடுதலிலும் பழகித் தேர்ச்சி பெற்றவராய் உள்ள புலவரைத் தேடி வந்த அப்புலவர் அனைவர்க்கும் அவர்கள் மகிழும் வண்ணம் ஆடை, அணிகலன், பொன் முதலியவற்றை வெறுப்ப வெறுப்பக் கொடுத்து அவர்களிடம் பரதநூலைக் கசடறக் கற்கலானான்[1].

---

1. இங்குப் பரத நூலிற் கூறிய நடனக் கலையின் வகை முதலாய நுட்பங்களைப் பரஞ்சோதி முனிவர் 8-ஆம் செய்யுள் முதல் 18-ஆம் செய்யுள் வரை விவரித்துக் கூறுகின்றார். அவற்றின் விரிவை மகா பரத சூடாமணி - நாட்டியப் பகுதியில் காண்க.

பரதம் - இது பாவம், ராகம், தாளம் என்பவற்றின் முதற் குறிப்பாகிய ப, ர, த என்னும் மூன்றெழுத்துக்களாலாயது. பாவம்–எடுத்த பொருளுக்கு இயைந்த தன்மையைப் பாவகம் தோன்ற நிகழ்த்திக் காட்டுவது. இஃது அவிநயம் எனவும் பெயர் பெறும். இதில் வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, இன்பம், அவலம், நகை, வெகுளி, நடுவு நிலை என்னும் ஒன்பது சுவையும், அவைபற்றி உள்ளத்தே நிகழும் குறிப்பும், அக்குறிப்பின் புறத்தே வெளிப்பட்டுத் தோன்றும் மெய்ம்மயிர் சிலிர்த்தல், கண்ணீர் வார்தல், நடுக்கமடுத்தல், வியர்த்தல், தேற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரற் சிதைவு என்னும் மெய்ப்பாடு பத்தும் அடங்கும். அவிநயம், வெகுண்டோன் அவிநயம் முதல் நஞ்சுண்டோன் அவிநயம் வரை இருபத்து நான்கு வகையாம். ராகம் - இசை; இது பைரவி முதலாகச் சொல்லப்படும் இராகங்களாம். தாளம் - இது சச்சபுடம், சாசற்புடம், சட்பிதா புத்திரிகம், சம்பத்து வேட்டம், உற்கடிதம் என்னும் பஞ்ச தாளமும், துருவம், மட்டியம், ரூபகம், சம்பை, திரிபுடை, அடதாளம், ஏக தாளம் என்னும் சப்த தாளமும் பிறவுமாம். இதன் இலக்கணங்களைப் பரத சாஸ்திரம் தாளவியலிற் காண்க.

இராசசேகர பாண்டியன் பரத நூலிற் கூறிய கூத்தினைப் பயிலும் போது தனது உடலில் அயர்வு நோய் உண்டாவதை அறிந்தான். ''இத்தகைய அயர்வு நோய் ஞானவடிவாய் வெள்ளியம்பலத்துள் ஆடியருளும் சிவபெருமானுக்கும் உண்டே! பிரம விட்டுணுக்களா லுங் காணுதற்கரிய திருவடிகளுள் ஒன்றே துன்பமுறப் பலநாளாக ஆடி நிற்கின்றதே! அந்தோ! இப்பரத நூலைக் கற்று அதனால் நேரும் வருத்தம் அனைத்தையும் அறிந்து வைத்தும் இதனை நான் உயிருடன் பார்த்துக்கொண்டிருப்பதோ தருமம்! பிறவிக் கடலின்கரையைக் காணுதற்குரிய நன்னாள் வந்தடுப்பவர் யாவராயினும் அவரவை வருக் கும் இன்பத்தையும் வீடு பேற்றையும் அளித்தருளும் எம்பெருமான் செய்கின்ற இத் இத்திருக்கூத்தினை நான் எப்படிப் போய்த் தடுப்பது! இது தகாது; தடுக்காவிடிலோ அவருடைய திருவடி வருந்துமே'' என்று பலவாறு சிந்தித்து வருத்தமுற்றான்.

சிவபெருமான கால் மாறி ஆடுதல்

பின்பு, பாண்டியன், ''இதற்கு இதுவே துணிவு'' என்று ஒன்றை நினைந்து எழுந்துபோய்ச் சிவராத்திரியிலே திருக்கோயிலை அடைந்து, விண்ணிழி விமானத்தில் எழுந்தருளியிருக்கும் சோம சுந்தரக் கடவுளுக்கு நான்கு யாமமும் சிவாகமப்படி விசேட பூசை யினைச் செய்வித்து, மனமுருகித் துதித்துத் திருவடிகளை வணங்கிக் கொண்டு சென்று, வெள்ளியம்பலத்திலே பேரொளியாய் விளங்கும் பரமபதியின் மெய்ஞ்ஞானத் திருக்கூத்தினைத் தரிசித்து மனமகிழ்ந்து வணங்கிக் கண்களில் ஆனந்த அருவி பொழியச் சிரசின்மீது இரு கையையும் கூப்பி நின்று, ''எம்பெருமானே! ஊன்றிய திருவடியை மேலே எடுத்து வீசி, தூக்கிய திருவடியை நிலத்தின்மீது ஊன்றி இன்று அடியேன் காணுமாறு கால்மாறி ஆடுதலைச் செய்து தமியேன் வருத்தம் அனைத்தும் தீர்த்தருளுப்; அங்ஙனம் செய்தருளாவிடில் அடியேன் இறந்துவிடுவேன்'' என்று விண்ணப்பஞ் செய்துகொண்டு சிவபெருமான் எதிரே தன் உடைவாளை நாட்டி அதன்மேலே குப்புற விழப் புகுந்தான். உடனே அன்பிற்கெளியராகிய சிவபெருமான், தமது இடத்தாளைக் கீழேயூன்றி, வலத்தாளை மேலே எடுத்து வீசிக் கால் மாறி ஆடிக் காட்டியருளினார்;[1] பாண்டியனுடைய கவலையை யும் மும்மலங்களையும் போக்கி, அவனைப் பேரின்பக் கடலுள் வீழ்த்தினர்.

---

1. இங்கு, இந்திரனுக்கு முன்னர் ஆடிய வடகீழ் மூலையிலே சிவ பெருமான் கால் மாறியாடித் திருவடியின்மேல் கொடி கட்டினர் என்றும், அதனால் சிவபெருமானுக்கு 'அதிர வீசி யாடுவார்' மாறி யாடிக் கொடியிட்ட பெருமான்' என்ற திருநாமங்கள் உண்டாயின என்றும் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறும். ''அதிர வீசி யாடுவாய் அழகன் நீ! புயங்கன் நீ!'' என்பது திருஞான சம்பந்தர் - திருவாலவாய்த் தேவாரம்.

பாண்டியன் இறைவனைத் துதித்தல்

இனிமை மிகுந்த மதுவில் வீழ்ந்த வண்டைப் போல உண்மை, அறிவு. இன்பம் (சச்சிதானந்தம்) என்று சொல்லப்படும் கடல் வெள்ளத்தில் மூழ்கிய பாண்டியன் எழுந்தான்; மனம் வாக்குக் காயம் என்னும் இம்மூன்றையும் சிவபெருமானுக்கே உரிமையாக்கி அன்பே வடிவமாய் நின்று துதிக்கத் தொடங்கினான்.

பெரியாய் சரணம்! சிறியாய் சரணம்!
கரியா கியஅங் கணனே சரணம்!
அரியாய் எளியாய் அடிமா றிநடம்
புரிவாய் சரணம்! புனிதா சரணம்!

நதியா டியசெஞ் சடையாய்! நகைவெண்
மதியாய்! மதியா தவர்தம் மதியிற்
பதியாய்! பதினெண் கணமும் பரவுந்
துதியாய் சரணம்! சுடரே சரணம்!

பழையாய்! புதியாய் சரணம்! பணிலக்
குழையாய் சரணம்! கொடுவெண் மழுவாள்
உழையாய் சரணம்! உருகா தவர்பால்
விழையாய் சரணம்! விகிர்தா சரணம்!

இருளாய்! வெளியாய் சரணம்! எனையும்
பொருளா கநினைந் துபுரந் தரன்மால்
தெருளா தநடந் தெரிவித் தெனையாள்
அருளாய் சரணம்! அழகா சரணம்!

அயனத் தனெனப் படுமா டரவச்
சயனத் தவனைத் தருதத் துவ! நால்
வயனத் தவ! வா னவர்வா னவ! சேல்
நயனத் தவள்நா யகனே சரணம்!

என்று இவ்வாறு துதித்துவணங்கி, ''வெள்ளிமன்றினுள் ஆடும் பெருமானே! இந்த மாறியாடிய திருக்கூத்தினை யாவரும் தரிசிக்கும் படி எக்காலத்தும் இவ்வாறே நின்று தேவரீர் அருள் செய்ய வேண்டும். இதுவே, அடியேன் வேண்டும் வரமாகும்'' என்று விண்ணப்பம் செய்தான். அன்று முதல் இன்றுவரையும் சோம

சுந்தரக் கடவுள் [1]கால் மாறி ஆடிய திருக்கோலத்தினராகவே நின்று அருள் புரிந்து வருகின்றார்.

செய்யுள் — 29
ஆகச் செய்யுள்—1489

## 25. பழியஞ்சின படலம்

### குலோத்துங்க பாண்டியன் ஆட்சி

சிலகாலம் சென்ற பின்பு இராசசேகரன் தன் அன்பிற்குரிய புதல்வனாகிய குலோத்துங்கனுக்குத் தனது அரசியலை அளித்துவிட்டுத் தன் வினைகளையெல்லாம் வென்று போக்கி வெள்ளியம்பலத்துள் ஆடியருளும் சோமசுந்தரக் கடவுளின் திருவடி நீழலில் இரண்டறக் கலந்து பேரின்பத்தை அடைந்தான். தந்தையின் செங்கோலைக் கையிற்கொண்ட [2]குலோத்துங்க பாண்டியன் நாடோறும் மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளை அன்புடன் துதித்து வழிபடும் பத்தி நியமத்தை மேற்கொண்டான். அவனுக்கு மனைவியர் பதினாயிரவர் இருந்தனர்; அவர்கள் ஒவ்வொருவர்க்கும் அவ்வாறு புதல்வராக அறுபதினாயிரம் புதல்வர்கள் பிறந்தார்கள். அப்புதல்வர்களுள்ளே முதலில் தோன்றிய புதல்வன் வலிய ஆண்மையையுடைய இளம்சிங்கத்தை ஒத்தவன்; சேமநிதியைப்போன்றவன்; அனந்தகுணன் என்னும் பெயருடையவன்; அவன் கற்றற்குரிய கலைகளையும், குதிரை, யானை, தேர் என்பவற்றைச் செலுத்தும் திறமும், விற்போர், வாட்போர் முதலாயவற்றையும் கற்றுச் சிறப்புடன் திகழ்வதைத் தந்தையாகிய குலோத்துங்க பாண்டியன் கண்டு மகிழ்ந்தனன்.

### திருப்புத்தூர் மறையவன் மனைவி இறத்தல் – வீண் பழி

குலோத்துங்க பாண்டியன் அரசியற்றுநாளிலே, வயல்கள் சூழ்ந்த திருப்புத்தூரினின்றும் ஒரு மறையவன், தன் மனைவியோடும், பால் மணமாறுத வாயினையுடைய கைக் குழந்தையோடும் தன் மாமன் வீட்டிற்கு மதுரையை நோக்கிக் காட்டின் மார்க்கமாக வந்துகொண்டிருந்தான். அங்ஙனம் வரும் அம்மறையோன், தண்ணீர்த் தாகங் கொண்டு வருந்துகின்ற மனைவியை வழியிலே நிற்கின்ற ஒரு பெரிய ஆலமரத்தின் நிழற்கீழே இளங் குழந்தையோடும் இருக்கச்செய்து தான் நீர் நிலையினைத் தேடிச் சென்றான்.

---

1. இங்கு, ''பஞ்சவன் நிறைந்த அன்புடன் வேண்ட மாறிக் குனித்த நீறணி பெருமான்'' எனவரும் கல்லாட அடிகள் கருதற்பாலன.

2. இவன் இரண்டாம் குலோத்துங்க பாண்டியன் என்க.

## புத்தக விற்பனையாளர்களுக்கும், அன்பர்கட்கும்

## ஒரு நற்செய்தி !

ஸ்ரீ காசிமடம் பல அறக்கட்டளைகள் நிறுவிப் பல நூல்களை வெளியிட்டு வருவது அனைவரும் அறிந்ததே. அறக்கட்டளைகள் இல்லாமலும் ஸ்ரீ காசிமடம் வெளியீடுகள் பலசெய்து வருவதையும் அன்பர்கள் அறிவார்கள். அவற்றை இப்படி வகைப்படுத்தலாம்.

| | |
|---|---|
| பன்னிரு திருமுறைப் பதிப்புக்கள், | திருக்குறட் பதிப்புக்கள் |
| சாஸ்திர நூற்பதிப்புக்கள் | உரைநடையில் சமயவிளக்கநூல்கள் |
| தொகுப்பு நூல்கள் | மொழிபெயர்ப்பு நூல்கள் |

இவ்வகையான நூல்கள் இலட்ச ரூபாய்க்கு மேற்பட்ட அளவில் விற்பனைக்குத் தயாராக உள்ளன. திருக்குறள் மறு பதிப்புக்கள் தொடங்கப் பெறவுள்ளன.

**அனைத்தும் அடக்கவிலைப் பதிப்புகள்; குறைந்தவிலைப் பதிப்புக்கள்!**

இவற்றைப் பெற்று விற்பனை செய்ய விரும்பும் விற்பனையாளர்களுக்கு இதுநாள் வரையிலும் இருந்த சில செளகர்யக் குறைவுகளை நிவர்த்தி செய்து **ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** சில நலம்பயக்கும் சலுகைகளை அறிவித்தருளியுள்ளார்கள்.

**சலுகைகள்:**

1. ஸ்ரீ காசிமடம் வெளியீடுகள் ரூ. 50/-க்கு மேல் பெறும் விற்பனையாளர்கள் அன்பர்கட்கு 20% கழிவு உண்டு.

[இதுவரை 20 பிரதிகட்குமேல் பெறுவோருக்குக் கழிவு என்று இருந்த விதி தளர்த்தப்பெற்றது.]

2. ரூ. 1000/-க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச் செலவு இலவசம்.

3. ஆவண ஒப்பந்தங்களின்பேரில் தக்க கம்பெனிகட்கு ரூ. 5000/- வரை (மூன்றுமாத காலத்திற்குள் திரும்பிச் செலுத்துமாறு) நூல்கள் கடனாக வழங்கப்பெறலாம்.

4. ஸ்ரீ காசிமடம் புதிய வெளியீட்டு எண் வரிசையில் உள்ள நூல்களில் ஆண்டொன்றுக்கு ரூ 1000/-க்குமேல் பெறும் விற்பனையாளர்களுக்கு 5% விற்பனைக் கழிவு அதிகமாக வழங்கப்பெறும்.

**வேண்டுகோள்:-**

அன்புகூர்ந்து நூல்களைப்பெற, கீழ்க்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ள வேண்டுகிறேன். ... நி. ஆ-ர்

முகவரி:- நிர்வாக ஆசிரியர்,

**ஸ்ரீகுமரகுருபரர்,**

ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் 612 504

[தென் இந்தியா]

ஸ்ரீ காசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி,
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி :- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் – Pin 612 504